உக்ஷ்ணு தர்பஜ்வர பரஜுஷா
ஸாகமேகத்ர பத்த:
ஶ்ராம்யன் வத்ஸ: ஸ்மரஹர
யுகே தாவதா கிம் கரோது ‖ 9 ‖

(ப — ரை) விஷயங்கள் தடங்கலாக வுள்ளன எனக்கூறுகிறார். स्वामिन् - பிரபுவே विषम विषय स्वैरिणा — (கரடு முறடான பிரதேசங்களில்) துக்கத்தைத்தரக்கூடிய, இந்திரிய திருப்திக்குரிய சிற்றின்பப் பற்றுதல்களில் அடங்காமல் திமிர் கொண்டு இஷ்டம் போல் ஓடிக்கொண்டிருக்கும் वैरिणा - எனக்கு விரோதியான (தீங்கிழைப்பதான) हृदयग्रन्थिना - சித்தத்தில் சிடுக்குண்டாக்கியிருக்கும் துர்வாஸனையோடு साधं - கூட अस्मिन् वपुषि - இச்சரீரமாகிற (வண்டியில்) बद्धः — பிணைக்கப்பட்ட अहं - நான் किं कुर्वे - என்னதான் செய்ய முடியும். स्मरहर - மதனனை மாய்த்தவரே दर्पज्वरभरजुषा - திமிர் மிகுதியினால் கொதிப்புள்ள धावता - பாய்ந்தோடுகிற उक्ष्णा साकं - காளையுடன் கூட एकत्र युगे - ஒரே நுகத்தடியில் बद्धः - பூட்டப்பட்ட श्राम्यन् वत्सः — சிரமத்தினால் சோர்வடைந்த இளங்கன்று किं करोतु - என்ன செய்யக் கூடும்?

(க — ரை) करण विवशः - என்று முன் சுலோகத்தில் கூறியதை இங்கு விரித்துரைக்கின்றார். ஸுலபமான துக்க நிவ்ருத்தி மார்க்கத்தை அறிந்திருந்தும் நான் துஷ்டத்தன முள்ள விஷய வாஸனையினால் தோற்கடிக்கப்பட்டவனானேன். பார்ப்பதற்கு ஸுகம் போலவும் இறுதியில் துக்கத்தைத் தருவதுமான இந்திரியார்த்தங்களில் ஆவேசத்துடன் பாயும் அநேக காலவாஸனா ஜடிலமான என் மனம் என்னைத் தூக்

வாரிக் கொண்டுபோய் அனர்த்தங்களுக்கு உள்ளாக்கி விடுகிறது. நான் என்ன செய்வேன். ஒரு முரட்டுக் காளையுடன் ஒரே வண்டியில் பூட்டப் பெற்ற இளங் கன்று என்ன செய்யும்? காளை மேடுபள்ளம் பார்க்காமல் திமிரிக் கொண்டு அதிவேகமாய் ஓடவாரம்பிக்கும் போது இளங்கன்று எவ்வித பரிதாப நிலையை அடையும்? வாஸனை முடிச்சுக்களேறிய திமிர் கொண்ட என் மனத்துடன் நானும் இச்சரீர மாகிற வண்டியில் கட்டப்பட்டிருக்கிறேன். பலமற்ற நான் (ஜீவன்) துஷ்டவாஸனைகளால் அடக்க வொண்ணாத என் மனம் இழுத்த இடமெல்லாம் பரிதபித்துக் கொண்டே ஓடுகிறேன். என்றால் வேறு ஒன்றும் செய்ய முடியவில்லை.

(வி - ரை) पराञ्चि खानि व्यतृणत् स्वयम्भूः तस्मात्पराङ् पश्यति नान्तरात्मन्! என்ற வேதவாக்யம் இந்திரியங்கள் எப்பொழுதும் பஹிர் முகமாகவே செல்லுகின்றன என்பதையும், அவைகளை அடக்கி அந்தர்முகமாகச் செலுத்துகின்றவன் தீரன் என்றும் கூறுகிறது. कुर्वते कर्म भोगाय कर्म कर्तुं च भुञ्जते என்பதும் கர்மங்களைச் செய்வதிலேயே ஈடுபாட்டைக்குறிக்கிறது.

## —※ अनितरगतित्वाभिधानम् ※—

नाहं रोद्धुं करणनिचयं दुर्नयं पारयामि
स्मारं स्मारं जनिपथरुजं नाथ सीदामि भीत्या ।
किं वा कुर्वे किमुचितमिह क्वाद्य गच्छामि हन्त
त्वत्पादाब्जप्रपदनमृते नैव पश्याम्युपायम् ॥ १० ॥

நாஹம் ரோத்தும் கரண நிசயம்
துர்நயம் பாரயாமி
ஸ்மாரம் ஸ்மாரம் ஜநிபதருஜம்
நாத ஸீதாமி பீத்யா |
கிம்வா குர்வே கிமுசித மிஹ
க்வாத்ய கச்சாமி ஹந்த
த்வத் பாதாப்ஜ ப்ரபதனம்ருதே
நைவ பச்யாம்யுபாயம் || 10 ||

(ப - ரை) தனக்கு வேறு கதியில்லை என்று கூறுகின்றார். नाथ - ஸ்வாமி दुर्नयं - கட்டுப்பாடுகளுக்கு அடங்காத करणनिचयम् - இந்திரியங்களை रोद्धुं- அடக்கியாள अहं - நான் न पारयामि - சக்தியற்றவனாக இருக்கிறேன். जनिपथरुजं - ஜன்மமெடுத்தது முதல் அனுபவித்து வரும் ச்ரமத்தை स्मारं स्मारं - நினைக்கும் பொழுதெல்லாம் भीत्या - பயத்தினால் सीदामि - நடுங்குகிறேன். हन्त - ஐயோ! किं वा कुर्वे - நான் என்ன செய்வேன். इह किमुचितम् - இதற்கு என்ன தகுந்த பரிஹாரம்! अद्य क्व गच्छामि - இப்பொழுது (இந்த சிரமத்தை நிவ்ருத்தி செய்து கொள்ளுவதற்கு) நான் எங்கே செல்லுவேன்? त्वत्पादाब्जप्रपदनमृते - உன் திருவடிக்கமலங்களில் அடைக்கலம் புகுவதைத் தவிர उपायं - வேறு வழியை नैव पश्यामि - நான் அறிகிலேன்.

(க - ரை) இந்த்ரிய நிக்ரஹத்தில் அசக்தனாயும் ஸம்ஸார வேதனைகளை விலக்க விரும்புகிறவனாயுமிருக்கு மெனக்கு சரணாகதியைத் தவிர வேறு கதியில்லை என்பதைத் தெரிவிக்கிறார். ஸம்ஸாரவாழ்க்கையின் கஷ்டங்களை (ஜனனமரணாதிகளை) நினைத்து நினைத்து பயம் கொண்டு இதிலிருந்து விடுவிக்கப்பட

வேண்டும் என்று கவலை உண்டானவர்களுக்கு விஷயங்களில் இயற்கையாகவே பிரவர்த்திக்கும் இந்திரியங்களை அடக்க முடியாதது பற்றி துக்கம் ஏற்படுகிறது. துர்வாஸனைக்கு அடிமையான சித்தத்திற்கும் முக்தியை விரும்பும் ஜீவனுக்கும் ஏற்படும் போராட்டத்தில் சளையுற்ற ஜீவன் தைன்யத்துடன் ஈச்வரனை நோக்கிப் புலம்புகிறான். "என்ன செய்வேன்? எங்கு செல்வேன்? எனக்கு எது உபாயம்? ஸ்வாமி! ஒன்றும் வகையறியாத நான் உன் சரணத்தைப் பற்றிக் கொள்ளுகிறேன். எனக்கு நீர் தான் வழி காட்டவேண்டும்." என்று.

(வி - ரை) धन्याः कति त्रिभुवने परमोपभोग्यं संसारमेव परमेश्वरि भावयन्तः। आयासरूपमवबोधमिमं समेत्य क्लिश्ये कियत् कियदहं त्वमुना भवेन॥ என்று நீலகண்ட தீக்ஷிதர் கூறுவதும் கவனிக்கத்தக்கது. விஷய ஸுகங்களையே நாடி நிற்பவர்களுக்கு விசாரமில்லை.

—* शिवचरणप्रपदनेन प्रसादाभ्यर्थनम् *—

उल्लङ्घ्याज्ञामुडुपतिकलाचूड ते विश्ववन्द्य
त्यक्ताचारः पशुवदधुना मुक्तलज्जश्चरामि।
एवं नानाविधभवततिप्राप्तदीर्घापराधः
क्लेशाम्भोधिं कथमहमृते त्वत्प्रसादात्तरेयम्॥ ११॥

உல்லங்க்யாஜ்ஞா முடுபதி
கலாசூட தே விச்வவந்த்ய
த்யக்தாசார: பசுவததுனா
முக்தலஜ்ஜச்சராமி।

ஏவம் நாநாவித பவததி
ப்ராப்த தீர்க்காபராத:
க்லேசாம்போதிம் கதமஹம்ருதே
த்வத்ப்ரஸாதாத் தரேயம் ‖ 11 ‖

(ப-ரை) சிவனுடைய தாளை வணங்கி அவனருள் வேண்டுகின்றார். उडुपतिकलाचूड - சந்திரகலாதரனே विश्ववन्द्य - ஸகல ஜீவராசிகளாலும் தொழப்படுபவனே ते आज्ञां - (ஶ்ருதி ஸ்ம்ருதி புராணங்களால் வெளியிடப் பட்ட) உன் கட்டளையை उल्लङ्घ्य - மீறியும் त्यक्ताचारः - நன்னடத்தைகளைத் துறந்தவனுமான நான் अधुना - இப்பொழுது पशुवत्-ஒரு மிருகத்தைப்போல मुक्तलज्जः - வெட்கங் கெட்டவனாக चरामि - திரிகிறேன். एवं - இவ்விதமே नानाविध भवतति प्राप्त दीर्घापराधः பலவித ஜன்மத்தொடர்களில் அடையப்பட்ட நீண்ட குற்றச் சாட்டுகளுடன் கூடிய अहं - நான் त्वत्प्रसादात् ऋते - உன் கருணையில்லாவிடில் क्लेशाम्भोधिं - துக்கஸாகரத்தை कथं तरेयं - எப்படித் தாண்டுவேன்?

(க-ரை) உன்னை சரணாகதி செய்யும் நான் பெரிய அபராதி என்று தெரிவித்துக்கொள்ளுகிறார். ஹே சந்த்ர கலாதரனே! உன் கட்டளைகளை மீறி நடந்த வன் நான். ஶ்ருதி ஸ்ம்ருதி புராணங்களின் மூலம் உன்னால் போதிக்கப்பட்ட கர்மாக்களையும் தர்மங் களையும் சரிவர அனுஷ்டிக்காதவன். புத்தி பூர்வமாக உன் விதிகளை மீறிவிட்டு பயமும் வெட்கமும் கூட இல்லாமல் ஒரு விலங்கைப்போல விஷய ஸுகங் களையே பல இடையூறுகளுக்கு மத்தியில் தேடி அலைந்து கொண்டிருக்கிறேன். இவ்விதம் நான் அப ராதியானது இந்த ஜன்மாவில் மட்டுமில்லை. பலவித

மான அநேக கோடி ஜன்மாக்களிலும் இப்படியே அபராதியாக இருந்துள்ளேன். எல்லையற்ற துக்கக் கடலை உன் தயவின்றி வேறு எவ்விதம் நான் தாண்டப் போகிறேன்!

(வி - ரை) "அவனருளாலே அவன் தாள் வணங்கி" என்ற சைவ சமயாசாரியர்களின் வாக்கியம் கண்டு கவனிக்கத்தக்கது. श्रुतिस्मृती ममैवाज्ञा என்றது கீதா வாக்கியம்.

## —※ भाव्यपराध संभावनया निस्त्रपत्वनिवेदनपूर्वक-प्रार्थना ※—

क्षाम्यस्येव त्वमिह करुणासागरः कृत्स्नमागः
संसारोत्थं गिरिश सभयप्रार्थनादैन्यमात्रात् ।
यद्यप्येवं प्रतिकलमहं व्यक्तमागःसहस्रं
कुर्वन् मूर्खः कथमिव तथा निस्त्रपः प्रार्थयेय ॥ १२ ॥

க்ஷாம்யஸ்யேவ த்வமிஹ
கருணாஸாகர: க்ருத்ஸ்னமாக:
ஸம்ஸாரோத்தம் கிரிச ஸபய
ப்ரார்த்தனா தைன்ய மாத்ராத் ।
யத்யப்யேவம் ப்ரதிகலமஹம்
வ்யக்தமாகஸ்ஸஹஸ்ரம்
குர்வன் மூர்க்க: கதமிவ ததா
நிஸ்த்ரப: ப்ரார்த்தயேய ॥ 12 ॥

(ப - ரை) மேலும் அபாரதம் ஏற்படக்கூடும் என்றெண்ணி வெட்கமின்மையைத் தெரிவித்து வேண்டுகிறார். गिरिश - ஏ பரமேசுவரனே! करुणासागरः

त्वं கருணைக் கடலான நீ, सभयप्रार्थनादैन्यमात्रात् - அச்சங் கொண்டு தீனக்குரலோடு செய்யப்படும் வேண்டு கோள் ஒன்றினாலேயே संसारोत्थं - ஸம்ஸாரத்தொடர் பினால் உண்டான कृत्स्नं आगः - எல்லாப் பாபங்களையும் इह क्षाम्यसि एव - இங்கே (இப்பொழுதே) மன்னித்து விடுவாய் என்பதற்கு ஆக்ஷேபமில்லை. यद्यपि - இப்படி இருந்தபொழுதிலும் एवं - இம்மாதிரி प्रतिकलं - ஒவ் வொரு நிமிஷத்திலும் आगःसहस्रं - ஆயிரம் குற்றங்களை व्यक्तं - வெளிப்படையாகவே कुर्वन् - செய்து கொண் டேயிருக்கும் मूर्खः अहं - முட்டாளாகிய நான் निस्त्रपः - வெட்கமற்றவனாக तथा - அவ்விதம் कथमिव - எப்படித் தான் प्रार्थये - வேண்டிக்கொள்ளுவேன்?

(க - ரை) கருணைக்கடலான நீ, என்னால் பல ஜன் மங்களிலும் மேற் கூறியபடி செய்யப்பட்ட அபரா தங்களை நான் மிக்க பயத்துடனும் மிகவும் பச்சாத் தாபத்துடனும் பிரார்த்தனை செய்துகொள்வேனாகில் மன்னித்துவிடுவாய் என்பதற்கையமில்லை. ஆனால் உன்னைப்பிரார்த்தனை செய்து கொள்ள வெட்கமா யிருக்கிறது. ஏனெனில் நான் முன் செய்த அபரா தங்களை க்ஷமித்துக் கொள்ளும்படி கேட்கும்பொழு தாவது அவ்வித அபராதங்களைச் செய்வதை நிறுத்தி யவனாக வேண்டுமல்லவா? இப்பொழுதும் அதே குற்றங்களைச் செய்து கொண்டேயிருக்கும் நான் எப் படி உன்னிடம் தைர்யமாக வந்து என்னுடைய பழைய குற்றங்களை மன்னித்து விடும்படி வேண்டிக் கொள்வேன்?

(வி - ரை) अपराधसहस्राणि क्रियन्तेऽहर्निशं मया। दासोऽयमिति मां मत्वा क्षमस्व परमेश्वर॥ என்ற பிரார்த்

தன்னையும் கவனிக்க. பெரியோர்களுக்கு வெட்கம் தன்னிடமிருந்தே மிகுதியாக உண்டாகிறது என்பது स्वतः सतां ह्रीः परतोऽपि गुर्वी என்ற கவியின் வாக்கினால் உணரலாம்.

—※ मृतिसमयदोषभूयिष्ठबुद्धिपारतन्त्र्यकथनम् ※—

सर्वं क्षेप्तुं प्रभवति जनः संसृतिप्राप्तमागः
चेतः श्वासप्रशमसमये त्वत्पदाब्जे निधाय।
तस्मिन्काले यदि मम मनो नाथ दोषत्रयार्तं
प्रज्ञाहीनं पुरहर भवेत्तत्कथं मे घटेत ॥ १३ ॥

ஸர்வம் க்ஷேப்தும் ப்ரபவதி
ஜன: ஸம்ஸ்ருதிப்ராப்தமாக:
சேத: ச்வாஸப்ரசம ஸமயே
த்வத்பதாப்ஜே நிதாய ।
தஸ்மின் காலே யதி மம
மனோ நாத தோஷத்ரயார்தம்
ப்ரஜ்ஞாஹீனம் புரஹர பவேத்
தத்கதம் மே கடேத ॥ 13 ॥

(ப-ரை) மரண காலத்தில் தோஷங்கள் மிகுந்து புத்தி ஸ்வாதீனத்தை இழந்து விடுமெனக் கூறுகிறார். नाथ पुरहर - திரிபுர மெரித்த ஸ்வாமி! श्वासप्रशम समये - மூச்சடங்கும் சமயத்தில் चेतः - மனத்தை त्वत्पदाब्जे - உன் சரண கமலத்தில் निधाय - வைத்து (அர்ப்பணம் செய்வதனால்) संसृतिप्राप्तं - பிறவிகளில் வந்தடைந்திருக்கும், सर्वं आगः - எல்லா பாபத்தையும், क्षेप्तुं - உதறி எறிந்துவிட, जनः प्रभवति - ஒருவனால் ஸாத்திய

மாகும் (எனினும்) **तस्मिन् काले** அந்த சமயத்தில் **दोषत्रयार्तं** - வாத பித்த கபமென்ற மூன்று தோஷங்களால் பீடிக்கப்பட்ட **मम मनः** - என் மனம் **प्रज्ञाहीनं** - நல்ல பிரஜ்ஞையிழந்ததாக **यदि भवेत्** - ஆகிவிட்டால் **तत्** - (முற்கூறிய) மனத்தை உன் திருவடிகளில் அர்ப்பணம் செய்தல் **कथं घटेत** - எப்படி ஸம்பவிக்கும்?

(க - ரை) எவ்வித பாபிக்கும் கடைசியாக ஒரு வழி இருக்கிறது. அஃதாவது எனக்கு பயன்படுமா? என்பதைப் பார்ப்போம். தன் ஜன்மாக்களில் ஸம்பவித்த எல்லா அபராதங்களையும் மரண காலத்தில் ஈச்வர சரண கமலத்தில் மனத்தை ஈடுபடுத்துவதின் மூலம் விடலாம். ஆனால் அந்தக்காலத்தில் நான் பிரஜ்ஞை தவறியிருந்தால் என்ன செய்வது? அந்திய காலத்தில் பிரஜ்ஞையுடன் கூடி இருப்பது அரிது. வாத பித்த கபங்களின் விபரீதங்களால் மூர்ச்சை ஏற்பட்டு விடலாம். ஆகையினால் ப்ராண வியோக சமயத்தில் மனத்தை ஈசுவரனிடம் செலுத்தி ஸர்வ பாபங்களையும் போக்கிக்கொள்ளலாம் என்றும் நிச்சயமாக நம்பியிருக்கவும் முடியாது.

(வி - ரை) **चित्तं दत्त्वा सकृदपि शिवे चिन्तितं साधयाथामः** என்றது நீலகண்டதீக்ஷிதர் வாக்கியம். **सांकेत्यं पारिहास्यं वा स्तोभं हेलनमेव वा।** என்ற பாகவத வாக்யத்தை அனுசரித்துத்தான் நம் முன்னோர் ஈச்வர நாமங்களை தங்களுடைய புத்ர பௌத்ராதிகளுக்கு வைத்தனர். **दृष्टावाक्षिप्यमाणायां संज्ञया ह्रियमाणया। मृत्युपाशेन बद्धस्य त्राता नैवोपलभ्यते। अयःपाशेन कालेन स्नेहपाशेन बन्धुभिः। हिक्कया बाध्यमानस्य श्वासेन परिशुष्यतः। मृत्युना कृष्यमाणस्य न खल्वस्ति परायणम्।** என்று வர்ணிக்

கப்படும் அந்த்ய காலத்தில் எவ்விதம் புத்தி திடமாக இருக்கமுடியும்?

## —❋ उत्क्रान्त्यवस्थानिरूपणम् ❋—

प्राणोत्क्रान्तिव्यतिकरदलत्सन्धिबन्धे शरीरे
प्रेमावेशप्रसरदमिताक्रन्दिते बन्धुवर्गे ।
अन्तः प्रज्ञामपि शिव भजन्नन्तरायैरनन्तैः
आविद्धोऽहं त्वयि कथमिमामर्पयिष्यामि बुद्धिम् ॥ १४ ॥

ப்ராணோத்க்ராந்தி வ்யதிகர
தலத் ஸந்தி பந்தே சரீரே
ப்ரேமாவேச ப்ரஸரதமிதா
க்ரந்திதே பந்துவர்க்கே ।
அந்த: ப்ரஜ்ஞாமபி சிவ
பஜந்நந்தராயை ரநந்தை:
ஆவித்தோஹம் த்வயி
கதமிமாமர்ப்பயிஷ்யாமி புத்திம் ॥ 14 ॥

(ப - ரை) உயிர் வெளிக்கிளம்பும் நிலையைக் கூறுகிறார். शिव - ஹே சிவ प्राणोत्क्रान्तिव्यतिकरदलत्सन्धिबन्धे शरीरे - பிராணவாயு வெளிக்கிளம்புவதனால் சரீரத்தின் பூட்டுகள் தெறித்துக்கொண்டும் बन्धुवर्गे प्रेमावेशप्रसरदमिताक्रन्दिते - பந்து ஜனங்கள் பொங்கியெழும் அன்புப்பெருக்கால் கட்டுக்கடங்காதபடி அழுது கொண்டும் இருக்கும் பொழுது अन्तः प्रज्ञां - உள்ளே சுய உணர்வினை भजन्नपि - உடையவனாயினும் (உணர்வினை இழக்காதவனாய் இருப்பதாக வைத்துக் கொண்ட போதிலும்) अनन्तैः अन्तरायैः - கணக்கற்ற

இடையூறுகளால் आविद्धः अहं - சூழ்ந்து அமுக்கப் பட்ட நான் इमां बुद्धिं - இந்த புத்தியை त्वयि - உன்னிடத்தில் कथं - எப்படி अर्पयिष्यामि - செலுத்தப் போகிறேன்.

(க-ரை) அப்படியே சுய உணர்வில் இருப்பதாக வைத்துக் கொண்டாலும் மனத்தை உன்னிடம் ஈடுபடுத்துவது அஸாத்யமான காரியம். ஏனெனில் பிராணன் வெளிக்கிளம்பும் ஸமயத்தில் ஒவ்வொரு பூட்டுகளிலிருந்தும் கிளம்ப எத்தனிக்கும் பிராண வாயுவினால் ஏற்படும் மரணவலியை உணர்த்துமேயொழிய அந்த பிரஜ்ஞை பிரயோஜனப்படுத்திக் கொள்ளகூடியதாக ஆகாது. சரீரத்திற்குள் இந்த வேதனையிருக்க, வெளியில் பந்து மித்திரர்கள், அன்பின் மிகுதியினால் கூக்குரலிட்டு அழுதுகொண்டிருப்பார்கள். ஆதலால் அந்தக்கூச்சலினிடையே மனத்தைத்திருப்பி உன்னிடம் நாட்டுவதும் ஸாத்தியமாகாது. இவ்விதம் பல இடையூறுகளால் எனக்கு அந்த்ய காலத்தில் உணர்விருப்பினும் மனத்தை உம்மிடம் ஒப்படைக்க நான் இயலாதவனாகவே ஆவேன்.

(வி-ரை) தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் மனிதர்களுக்கும் யாவருக்கும் க்ஷேமத்தை விரும்பிக் கொடுத்தலாலும், அனாதி மல சம்பந்தம் அற்றவனாக இருத்தலாலும், ஸகலகல்யாணகுண ஆனந்த பூர்ணனாக இருத்தலாலும், யாவருக்கும் மங்களத்தை நினைத்தலாலும், த்வைத பிரபஞ்சத்தின் உபசமரூபியாக இருத்தலாலும், சிவன் என்று கூறப்படுகிறார். அவ்வாறு பல பொருள் சிவஶப்தத்திற்கு உண்டு என்பதை பலவகை ப்ரமாணங்களுடன் சிவார்க்கமணி தீபிகையில் தீக்ஷிதர் அவர்களே காட்டியுள்ளார். प्रायो मुहति

चेतः प्राणभृतां प्राणनिर्गमावसरे। पुण्येन यदि न मुह्यति पुनं वान्यस्स्मरन्म्रियते ॥ என்றார் நீலகண்ட தீக்ஷிதர். கட்டுண்ட குதிரை அடிக்கப்பட்டால், காலில் உள்ள கட்டுக் கயிற்றையும், கயிறு கட்டியுள்ள முளையையும் பிடுங்கிக் கொண்டு ஓடுவது போல, முக்ய ப்ராணன் கிளம்பும் பொழுது மற்ற இந்திரியங்களையும் வலிந்து எடுத்துக் கொண்டு போகும் என்பதும் அப்பொழுது உண்டாகும் வேதனை சொல்லி முடியாது என்பதும் சாந்தோக்யம் முதலிய உபநிஷத்துக்களாலும், ஸூதஸம்ஹிதை முதலியவற்றாலும் அறியலாம், मर्मसूत्क्रष्यमाणेषु च्यवमानेषु सन्धिषु। यद्दुःखं म्रियमाणस्य स्मर्यतां तन्मुमुक्षुभिः ॥ என்பதும் ஆன்றோர் வாக்கியம்.

## —* सद्यः स्वात्मसमर्पणम् *—

अद्यैव त्वत्पदनलिनयोरर्पयाम्यन्तरात्मन्
आत्मानं मे सह परिकरैरद्रिकन्याधिनाथ।
नाहं बोद्धुं तव शिव पदं न क्रिया योगचर्याः
कर्तुं शक्नोम्यनितरगतिः केवलं त्वां प्रपद्ये ॥ १५ ॥

அத்யைவ த்வத்பத நலினயோ:
அர்ப்பயாம்யந்தராத்மன்
ஆத்மானம் மே ஸஹ
பரிகரை: அத்ரிகன்யாதிநாத ।
நாஹம் போத்தும் தவ சிவ
பதம் ந க்ரியா யோகசர்யா:
கர்த்தும் சக்னோம்யநிதரகதி:
கேவலம் த்வாம் ப்ரபத்யே ॥ 15 ॥

(ப-ரை) உடனே தன் ஆத்மாவை ஸமர்ப்பணம் செய்கின்றார். अद्रिकन्याधिनाथ - ஹே பார்வதிபதியே अन्तरात्मन् - அந்தர்யாமியான புருஷனே! अद्यैव - இப்பொழுதே - त्वत्पद नलिनयोः - உன் இரு சரணகமலங்களில் परिकरैः सह - பரிவாரங்களோடுகூட मे आत्मानं - ஜீவ ரூபமான என்னை अर्पयामि - அர்ப்பணம் செய்து விடுகிறேன். शिव - ஹே சிவ तव पदं - உன் இருப்பிடத்தை (சரணத்தை) अहं - நான் बोद्धुं न शक्नोमि - அறிய சத்தியுடையவனில்லை. क्रियाः-(அவசியம் செய்ய வேண்டுமென்று விதிக்கப்பட்ட) கர்மாக்களை யாவது योग चर्याः - யோக சாஸ்திரரீதியில் அப்யாஸங்களை யாவது कर्तुं - செய்வதற்கு न शक्नोमि - என்னால் முடியாது. अनितरगतिः-வேறுவழியில்லாதவனாக त्वां - உன்னை. प्रपद्ये केवलं-சரணமடைதலை மட்டும் செய்கிறன்.

(க-ரை) முன் சுலோகத்தில் சொன்னபடி அந்த்ய காலத்தில் மனதை ஈசுவரனிடம் அர்ப்பணம் செய்வது அஸாத்யமானபடியால் இப்பொழுது உன் நினைவு வந்திருக்கும் பொழுதே நான் உன்னிடம் என்னை ஸமர்ப்பணம் செய்து விடுகிறேன். என்னை மட்டுமில்லை. என் பரிவாரங்களையும் சேர்த்துக் கொண்டு ஆத்மார்பணம் செய்து விடுகிறேன். ஹே பரமசிவ! எனக்கு உன் இருப்பிடமோ தெரியாது. கர்மானுஷ்டானத்தையோ யோகாப்யாஸத்தையோ செய்ய என்னால் இயலாது. வேறு ஒரு வழியும் அறியாத நான் உன்னைச் சரணமடைவது ஒன்றையே அனுஷ்டிக்கிறேன்.

(வி-ரை) त्वय्यर्पितं प्रथमममप्पययज्वनैव स्वात्मार्पणं विदधता स्वकुलं समस्तम्। का त्वं महेशि कुलदासमुपेक्षितुं मां को वानुपासितुमहं कुलदेवतां त्वाम्॥ என்று ஆனந்த ஸாகர

ஸ்தவத்தில் நீலகண்ட தீக்ஷிதர் இந்த ச்லோகத்தை "ஈச்வரனிடம் தனக்குத் தனிப்பட்ட சலுகை இருக்கிறது என்பதற்கும் பரம்பரையாக உரிமை உண்டு என்பதற்கும்" பிரமாணமாக எடுத்துக் காட்டுகிறார். ஸகல ப்ரபஞ்சத்திற்கும் அதிஷ்டானமாக வியாபித்திருத்தலாலும், சித்தின் ஆபாஸ மோஹத்தாலுண்டான எல்லாவற்றையும் எடுத்துக் கொள்வதனாலும், விஷயோன்முகமாயுள்ள புத்தி வ்ருத்திகளை ப்ராசீனமாய் தன்னுள் அடக்கிக் கொள்ளுவதனாலும், எப்பொழுதும் இருத்தலாலும் ஆத்மா என்று கூறப் படும். यच्चाप्नोति यदादत्ते यच्चात्ति विषयानिह। यच्चास्य सन्ततो भावस्तस्मादात्मेति गीयते। என்று ஸ்ம்ருதி. இதற்கு விரிவான உரை அனுபூதிப்ரகாசத்தில் காண்க. கர்மாக்கள்: ஸம்ஸ்காரங்கள், வேத வ்ரதம், பாகயஜ்ஞம், ஸோமயஜ்ஞம் முதலியன. யமம், நியமம் ப்ராணாயாமம், ப்ரத்யாஹாரம், தாரணை முதலிய எட்டு அங்கங்களை உடையது யோகம்.

## —* सर्वगुरुत्वनिरूपणपूर्विका प्रपत्तिः *—

यः स्रष्टारं निखिलजगतां निर्ममे पूर्वमीशः
तस्मै वेदानदित सकलान्यश्च साकं पुराणैः।
तं त्वामाद्यं गुरुमहमसावात्मबुद्धिप्रकाशं
संसारार्तः शरणमधुना पार्वतीशं प्रपद्ये॥ १६॥

யஸ்ஸ்ரஷ்டாரம் நிகில ஜகதாம்
நிர்மமே பூர்வமீச:
தஸ்மை வேதாநதித ஸகலான்
யஸ்ச ஸாகம் புராணை: ।

தம் த்வாமாத்யம் குருமஹமஸா
வாத்ம புத்தி ப்ரகாஶம்
ஸம்ஸாரார்த்த: ஶரணமதுனா
பார்வதீசம் ப்ரபத்யே ‖ 16 ‖

(ப - ரை) 'சிவபெருமானே யாவர்க்கும் குரு' என நிரூபணம் செய்து சரணமடைகிறார், निखिलजगतां எல்லா உலகங்களையும் स्रष्टारं - படைத்த பிரமனை यः ईशः – எந்த ஈஶ்வரன் पूर्वं - ஆதியில் निर्ममे - சிருஷ்டித்தானோ तस्मै - அந்த பிரமதேவனுக்கு पुराणैः साकं புராணங்களோடுகூட सकलान् वेदान् च - வேதங்கள் யாவற்றையும் यः - எந்த ஈசன் अदित - உபதேசித்தானோ आत्मबुद्धिप्रकाशं - தன் புத்தியில் ஜ்யோதிஸ்வரூபமாய் விளங்குகின்ற पार्वतीशं – பார்வதீ பதியான तं - அந்த आद्यं गुरुं - ஆதி குருவான त्वां - உன்னை संसारार्तः - பிறவியினால் (ஸம்ஸாரத்தினால்) தாபமடைந்த असौ अहं – இந்த நான் अधुना - இப்பொழுதே शरणं प्रपद्ये – ரக்ஷகன் என்று (அடைக்கலமாக) அடைகிறேன்.

(க - ரை) ஜகத்ஸ்ருஷ்டி கர்த்தாவான பிரமனை முதலில் சிருஷ்டித்து அவருக்கு வேதங்களை உபதேசித்த ஆதி குருவான பரமேஶ்வரனை தியானத்தினால் என் சித்தத்தில் நிறுத்தி என்னுடைய தாபங்களை விலக்கும்பொருட்டு அவரிடம் ஶரணாகதியடைகிறேன். சிருஷ்டி இருவகைப்படும். ஒன்று ப்ரகிருதி சிருஷ்டி. மற்றொன்று விக்ருதி சிருஷ்டி. ப்ரகிருதி சிருஷ்டியில் சிவனிடமிருந்து பிரமன் உண்டானது சுருதியில் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த ஜீவன்களிடையே

எவன் உன்னை ஶரணமடைகிறானோ அவனுக்கு ஞானத்தை அளித்து அவனுடைய கட்டை அவிழ்த்து விட்டு நித்யானந்த பரிபூர்ணமான உன்னுடைய அப்ராக்ருதமான திவ்ய பதவிக்கு அவனை அழைத்துக் கொள்ளுகிறாய். ஆகையினால் உன்னை நான் சரணமடைகிறேன். புல் முதலியவற்றைத் தின்று விவேகமற்றவைகளாய் தன்னை வேலை வாங்கும் மனிதர்களுக்கு அடிமையாகி பார மிழுத்தல் முதலிய காரியங்களில் க்லேசமும் துக்கமுமடையும் மாடுகளைப்போல ஜீவன் அஜ்ஞானியாய் இந்த வாழ்க்கைச் சக்கரத்தில் கட்டுண்டு பலவித கஷ்டங்களை அடைகின்ற இந்த ஜீவன்களை கட்டவும் அவிழ்த்து விடவும் யஜமானன் பரமேஶ்வரனே.

(வி - ரை) आत्मानः पशवः प्रोक्ताः सर्वे संसारवर्तिनः । तेषां पतित्वाद्देवेशः शिवः पशुपतिः स्मृतः ॥ என்று பாரதம் கூறுகிறது. यो देवानां प्रथमं पुरस्तात् विश्वाधिपो रुद्रो महर्षिः । हिरण्यगर्भं पश्यत जायमानं । कालावच्छेदयुक्तानां गुरूणामप्यसौ गुरुः । वामाङ्गादसृजद्विष्णुं दक्षिणाङ्गात्प्रजापतिम् । मध्यतो रुद्रमीशानं त्रीन्पुत्रानसृजच्छिवः ॥, आत्मा वा इदमग्र आसीत् स ईक्षत इमान्नु सृजा इति என்பது முதலிய வேதம், உபநிஷத், பாரதம், ஸூதஸம்ஹிதை, சிவ புராணம், ஸனத்ஸுஜாதீயம் முதலிய பல பிரமாண நூல்கள் சிவபெருமானே ஸகலகர்த்தா, பதி, ஸகலருக்கும் ஆதி குரு, ஸர்வஜ்ஞன் என்று தெளிவுறக் கூறுகின்றன. சிருஷ்டி வகைகளும் புராணங்களிலேயே விரித்துரைக்கப் படுகின்றன.

## —* पति पशु पाश निरूपणपूर्विका प्रपत्तिः *—

ब्रह्मादीन् यः स्मरहर पशून्मोहपाशेन बद्ध्वा
सर्वानेकश्चिदचिदधिकः कारयित्वाऽऽत्मकृत्यम् ।
यश्चैतेषु स्वपदशरणान्विद्यया मोचयित्वा
सान्द्रानन्दं गमयति परं धाम तं त्वां प्रपद्ये ॥१७॥

ப்ரஹ்மாதீன் யஸ் ஸ்மரஹர
பசூன் மோஹபாசேன பத்த்வா
ஸர்வானேகஸ்சிதசிததிக:
காரயித்வாத்மக்ருத்யம் ।
யஸ்சைதேஷு ஸ்வபதஸரணான்
வித்யயா மோசயித்வா
ஸாந்த்ராநந்தம் கமயதி பரம்
தாம தம் த்வாம் ப்ரபத்யே ॥ 17 ॥

(ப - ரை) பதி பசு பாசம் இம் மூன்றையும் விளக்கும் முகமாக சரணமடைகிறார். स्मरहर - மன்மதனை எரித்தவரே चिदचिदधिकः यः एकः - சித்ரூபமாயும் ஜடரூபமாயு முள்ள இந்த ப்ரபஞ்சத்தைக் காட்டிலும் வேறான எவனொருவன் ब्रह्मादीन् - பிரமன் முதலிய सर्वान् पशून् - ஸகலவிதமான பசுக்களையும் (ஜீவர்களையும்) मोहपाशेन - அஜ்ஞானமென்னும் கயிற்றினால் बद्ध्वा - கட்டி आत्मकृत्यं - அவரவர்கட்குரிய காரியங்களை कारयित्वा — செய்வித்து यश्च - எவன் மேலும் एतेषु - இவர்களில் स्वपदशरणान् - தனது திருவடியில் சரணமடைந்தவர்களை विद्यया - ஞானத்தின் மூலம் मोचयित्वा - கட்டிலிருந்து விடுவித்து सान्द्रानन्दं - பரிபூர்ண ஆனந்த மயமான परं - எல்லாவற்றிற்கும்

மேலான धाम - ஸ்தானத்திற்கு गमयति - போகும்படி செய்கிருயோ तं त्वां - அவ்விதமான உன்னை - प्रपद्ये சரணமடைகிறேன்,

(க - ரை) சேதனுசேதன மயமான இந்த பிர பஞ்சத்திற்கு அப்பாலுள்ள நீ இரண்டுகால் நான்கு கால் பசுக்களை அஜ்ஞானக் கயிற்ருல் கட்டி அவர் களுக்குரிய காரியங்களைச் செய்வித்து இந்த ஸம்ஸா ரத்தை நடத்தி வருகிருய். இந்த ஜீவன்களிடையே எவன் உன்னைச் சரண மடைகின்ருனோ அவனுக்கு ஞானத்தை அளித்து அவனுடைய கட்டை அவிழ்த்து விட்டு நித்யானந்த பரிபூர்ணமான உன்னுடைய அப் ராக்ருதமான பதவிக்கு அவனை அழைத்துக் கொள்ளுகிருய். ஆகையால் நான் உன்னைச் சரண மடைகிறேன். புல் முதலியவற்றை மென்று தின்று விவேகமற்றவைகளாய் தன்னை வேலை வாங்கும் மனி தர்களுக்கு அடிமையாகி பாரம் இழுத்தல் முதலிய காரியங்களில் க்லேசமும் துக்கமுமடையும் மாடு களைப்போல் ஜீவன் அஜ்ஞானியாய் இந்த வாழ்க்கைச் சக்கரத்தில கட்டுண்டு பற்பல கஷ்டங்களை அடை கின்ருன். இந்த ஜீவன்களைக் கட்டவும் அவிழ்த்து விடவும் யஜமானன் பரமேச்வரனே.

(வி - ரை) एषामीशे पशुपतिः पशूनां चतुष्पदामुत च द्विपदां, एष ह्येव साधु कर्म कारयति यमेभ्यो लोकेभ्य उन्निनीषते என்பது வேத வாக்யம். பாரதத்தில் - पशूनां वः पतिश्चाहं भविष्यामि सुरोत्तमाः । आत्मानः पशवः प्रोक्ताः सर्वे संसारवर्तिनः ॥ என்று பரமேச்வரன் யாவர்க்கும் பதி என்பதும் யாவரும் பசு என்பதும் தெளியக்கிடக் கின்றன.

## —* भवरोगभिषग्वरणं *—

भक्ताग्रयाणां कथमपि परैः योऽचिकित्स्याममर्त्यैः
संसाराख्यां शमयति रुजं स्वात्मबोधौषधेन ।
तं सर्वाधीश्वर भवमहादीर्घतीव्रामयेन
क्लिष्टोऽहं त्वां वरद शरणं यामि संसारवैद्यम् ॥ १८ ॥

பக்தாக்ர்யாணாம் கதமபி
பரைர் யோசிகித்ஸ்யாமமர்த்யை:
ஸம்ஸாராக்யாம் ஶமயதி ருஜம்
ஸ்வாத்ம போதௌஷதேந ।
தம் ஸர்வாதீச்வர பவமஹா
தீர்க்க தீவ்ராமயேந
க்லிஷ்டோஹம் த்வாம் வரத சரணம்
யாமி ஸம்ஸாரவைத்யம் ॥ 18 ॥

(ப - ரை) ஸம்ஸார ரோகவைத்யனைச் சரணமடைகிறார். सर्वाधीश्वर-எல்லா தேவர்களுக்கும் மேற்பட்ட கடவுளே, वरद - கேட்டதைக் கொடுப்பவரே, कथमपि - எவ்விதத்திலேயும், परैः अमर्त्यैः - மற்ற தேவர்களால், अचिकित्स्यां-வைத்யம் செய்து நிவ்ருத்தி செய்ய முடியாத संसाराख्यं-ஸம்ஸாரம் என்கிற பெயருடைய रुजं - வியாதியை, यः - எவர் भक्ताग्रयाणां - தன் பக்த சிகாமணிகளுக்கு, स्वात्मबोधौषधेन - சிவஜ்ஞானபோதம் என்ற மருந்தினால், शमयति - போக்கடிக்கிறாரோ, तं அவ்விதமான, संसारवैद्यं - ஸம்ஸாரரோகத்திற்கு வைத்யனை, त्वाम् - உன்னை, भव महादीर्घ तीव्रामयेन ஸம்ஸாரமாகிற கொடுமையான நீடித்த பெரிய வியா

தியினால், क्लिष्टः अहं-கஷ்டப்படுகிற நான், शरणं यामि சரணமடைகிறேன்.

(க-ரை) இந்த ஸம்ஸாரம் என்பது ஒரு ரோகம். இந்த வியாதிக்கு வைத்தியம் செய்ய வேறு ஒரு வைத்தியனாலும் முடியாது. மற்ற தேவர்கள் சில வரன்களைக் கொடுக்கலாம். ஆனால், இந்த ஸம்ஸார வியாதியைத் தீர்க்க அவர்களால் இயலாது. இந்தப் பிணிக்கு வைத்தியன் நீ ஒருவனே. உன்னிடம் பக்தி செய்தவர்களுக்கு இந்த நோயைத் தீர்த்து விடுகிறாய். இதற்கு நீ வைத்துக்கொண்டிருக்கும் மருந்து ஆத்மஜ்ஞானம் என்பதே. இந்தப் "பிறப்பு இறப்பு" என்னும் நோயால் அநேக காலமாய் மிகவும் பீடிக்கப்பட்ட நான் உன்னைத் தவிர வேறு எங்கு சரணமடையப் போகிறேன். ஆகையால் நீயே எனக்குக் கதி. எனக்கு இந்த வியாதியை நிவ்ருத்தி செய்விக்க வேண்டும்.

(வி-ரை) இதே கருத்தை ஸ்ரீ சங்கர பகவத்பாதர் அவர்களும் வெளியிட்டிருக்கிறார்கள்.

जननमृति युतानां सेवया देवतानां
न भवति सुखलेशः संशयो नास्ति तत्र ।
अजनिममृतरूपं साम्बमीशं भजन्ते
य इह परमसौख्यं ते हि धन्या लभन्ते ॥

ஆர்யாசதகத்தில், संसरणकातराणां संसरणिः शाम्भवी भक्तिः - என்றும், வேதத்தில், प्रथमो दैव्यो भिषक्तमं त्वा भिषजां शृणोमि என்றும் கூறியுள்ளது.

—* तारकोपदेष्टृत्वकथनपूर्वकं शरणवरणम् *—

ध्यातो यत्नाद्विजितकरणैर्योगिभिर्यो विमुक्त्यै (विमृग्यः)
तेभ्यः प्राणोत्क्रमणसमये संनिधायात्मनैव ।
तद्व्याचष्टे भवभयहरं तारकं ब्रह्म देवः
तं सेवेऽहं गिरिश सततं ब्रह्मविद्यागुरुं त्वाम् ॥ १९ ॥

த்யாதோ யத்நாத் விஜிதகரணைர்
யோகிபிர் யோ விமுக்த்யை (விம்ருக்ய:)
தேப்ய: ப்ராணோத்க்ரமண
ஸமயே ஸந்நிதாயாத்மனைவ ।
தத் வ்யாசஷ்டே பவபயஹரம் தாரகம்
ப்ரஹ்ம தேவ:
தம் ஸேவேஹம் கிரிஶ ஸததம்
ப்ரஹ்மவித்யாகுரும் த்வாம் ॥ 19 ॥

(ப - ரை) 'நீ தாரக மந்த்ரோபதேசம் செய்பவன், ஆதலால் உன்னைச் சரணமடைகிறேன்' என்று கூறுகிறார்.

**गिरिश**-ஈச்வரனே, **विजितकरणैः योगिभिः**-பொறிகளை வென்ற யோகிகளால், **यत्नात्** - பெரு முயற்சியினால், **ध्यातः** - தியானிக்கப்பட்ட, **यः देवः** - எந்த தேவன், **विमुक्त्यै** - மோக்ஷத்தின் பொருட்டு, (**विमृग्यः** - தேடத் தக்கவனாக இருப்பினும்) **तेभ्यः** - அவர்களுக்கு, **प्राणोत्क्रमणसमये** - ப்ராணவாயு வெளிக்கிளம்பும் நேரத்தில், **आत्मनैव** - தானாகவே, **सन्निधाय** - எதிரில் வந்து, **भवभयहरं**-ஸம்ஸாரபயத்தை நிவ்ருத்தி செய்யக் கூடிய **तारकं** - கரை யேற்றுவிக்கும், **तत् ब्रह्म** - அந்த அகண்டமான ப்ரஹ்ம சைதன்யத்தை, **व्याचष्टे** - உபதேசிக்கி

ருணே, तं-அந்த, ब्रह्मविद्यागुरुं - ப்ரஹ்ம ஜ்ஞானத்தை உபதேசிக்கும் குருவான, त्वां - உன்னை, सततं - எப்பொழுதும், सेवे - உபாஸிக்கிறேன்.

(க-ரை) பொறிகளை அடக்கி த்யான யோகத்தை அப்யாஸம் செய்துவந்த பெரியோர்களுக்கு ப்ராண வியோக ஸமயத்தில் முன்வந்து நின்று தாரக மந்த்ரத்தை உபதேசிக்கும், முக்தி மார்க்கத்திற்கு பரமாசார்யனுகிய உன்னை நான் சரணமடைகிறேன். இந்த்ரிய நிக்ரஹம் செய்து வெகு தீவ்ரமான முயற்சியுடன் த்யான யோகத்தைப் பயிலும் யோகிகளாலும் நீ தேடப்படுகின்ருய். அவர்களுக்கு நீ அந்த்ய காலத்தில் ப்ரஸன்னமாகி மோக்ஷத்திற்கு உதவும் உபதேசத்தையும் அருளுகின்ருய். ப்ரஹ்மஜ்ஞானத்தை உபதேசிக்கும் குரு நீயே. அத்தகைய உன்னை நான் த்யானுதிகளினுல் உபாஸிக்க இயலாதவனுயினும் கேவலம் சரணுகதியில் ஆராதிக்க முயலுகின்றேன். த்யான யோகத்திற்கு வசப்பட்டு எப்படி யோகிகளுடைய மரண காலத்தில் அவர்களை முக்தியடைவிக்கும் பொருட்டு நீ தானுகவே முன் வந்து நின்று உபதேசத்தை யருளுகின்றனையோ அவ்விதம் என் சரணுகதியையும் பொருட்படுத்தி என்னைக் காப்பாற்றுவாயாக.

(வி-ரை) இந்த சுலோகத்தின் முதல் பாதத்தில், विमुक्तये அல்லது विमृग्यः என்பதும் பாடம். முக்தி கண்டத்தில் எங்கு இருப்பினும் எப்படி இருப்பினும் பாபியாயினும் சிவக்ஷேத்திரத்தில் வாஸம் முக்தியைக் கொடுக்க வல்லது என்று கூறப்பட்டுள்ளது. கர்ப்ப, ஜன்ம, ஜரா, மரணம் முதலிய துன்பங்களினின்றும்

கரையேற்றுவதனல் ப்ரஹ்ம தாரகம் எனப்பட்டது.
पापिष्ठानामपि श्रद्धाविहीनानां जनार्दन। मुक्तिदं मरणादूर्ध्वं
शिवक्षेत्रेषु वर्तनम्॥ आत्मानमरणिं कृत्वा प्रणवं चोत्तरारणिम्।
ध्याननिर्मथनाभ्यासाद्देवं पश्येन्निगूढवत्॥

—※ नित्यदासतानिरूपणम् ※—

दासोऽस्मीति त्वयि शिव मया नित्यसिद्धं निवेद्यं
जानास्येतत्त्वमपि यदहं निर्गतिः संभ्रमामि।
नास्त्येवान्यन्मम किमपि ते नाथ विज्ञापनीयं
कारुण्यान्मे शरणवरणं दीनवृत्तेर्गृहाण॥ २०॥

தாஸோஸ்மீதி த்வயி சிவ மயா
நித்ய ஸித்தம் நிவேத்யம்
ஜாநாஸ்யேதத் த்வமபி யதஹம்
நிர்கதிஸ் ஸம்ப்ரமாமி।
நாஸ்த்யேவான்யத் மம கிமபி தே
நாத விஜ்ஞாபநீயம்
காருண்யான்மே சரணவரணம்
தீன வ்ருத்தேர் க்ருஹாண ॥ 20 ॥

(ப-ரை) எப்பொழுதும் நான் உனதடிமை எனக் கூறுகிருர்.

शिव - ஹே சிவனே, त्वयि - உன்னிடத்தில், दासोऽस्मि इति - நான் அடிமை என்று, नित्यसिद्धं - என்றும் உறுதியாயுள்ள இந் நிலை, मया - என்னல், निवेद्यं? - தெரிவிக்க வேண்டுவதோ? निर्गतिः - ரக்ஷிப்பவரின்றி, संभ्रमामि-அலைந்து திரிகின்றேன். (इति)यत् एतत्- என்பதையும், त्वमपि - நீயும் जानासि - அறிவாய். नाथ -

ஸ்வாமி, ते - உம்மிடத்தில், मम - எனக்கு, विज्ञापनीयं - தெரிவித்துக்கொள்ள வேண்டியது, अन्यत् - வேறு, किमपि - ஒன்றும், नास्त्येव - இல்லை. (ஆகையினால்), दीनवृत्तेः - பரிதவிக்கும் நிலையிலுள்ள; मे - என்னுடைய, शरणवरणं - சரணாகதிப்ராார்த்தனையை, कारुण्यात् - கருணையினால், गृहाण - ஏற்றுக்கொள்.

(க - ரை) ஸ்வாமி! நான் உன் தாஸன், உன்னைத் தவிர வேறு கதி எனக்கு இல்லை, என்பதைத் தானே நான் உன்னிடம் சொல்லிக்கொள்ளமுடியும். ஆனால் நான் உன் தாஸன் என்பது சாச்வதமாய் ஏற்பட்ட நிலை. ஆதலின் நான் சொல்லிக்கொள்ளாமலே நீ அறிந்த விஷயம். நான் திக்கற்றவனாய் பரிதபிக்கும் நிலையில் காப்பவரின்றிச் சுழன்றுகொண்டு வருகிறேன் என்பதும் முற்று முணர்ந்த உனக்குத் தெரியாததில்லை. இவ்விதம் பார்க்குங்கால் நான் உன்னிடம் தெரிவித்துக்கொள்ள வேண்டியது என்ன இருக்கிறது? ஆகையினால் கருணையை முன்னிட்டு மிக்க பரிதாப நிலையிலிருக்கும் என்னுடைய சரணாகதியை ஏற்றுக்கொள்வாயாக.

(வி - ரை) यः सर्वज्ञः सः सर्ववित् என்பது முதலியவற்றால் ஈசன் ஸர்வஜ்ஞன் என்பது புலப்படும். நீலகண்ட தீக்ஷிதரும், सानुग्रहं स्यान्मयि गर्भदासे என்று நித்யம் அடிமை என்பதைக் கூறுகிறார். சைவாகமங்களில் பதிபசுபாசங்கள் நித்யமாகக் கூறப்படுகின்றன. அதை அனுசரித்து, பரம வைதிக ஶ்ரேஷ்டரான தீக்ஷிதர் இவ்விதம் மார்க்கம் முதலியன கூறுவது எவ்வாறு பொருந்துமெனின், வ்யவஹார காலத்தில் ஸகுணோபாஸனையில் யாவும் பொருந்துவனவே. இத

ஞல் பாரமார்த்திகமான அத்வைதம் ஒருக்காலும் பங்கமடைவதில்லை.

## —* दीनदयानिधित्वमवलम्ब्य प्रार्थना *—

ब्रह्मोपेन्द्रप्रभृतिभिरपि स्वेप्सितप्रार्थनाय
स्वामिन्नग्रे चिरमवसरस्तोषयद्भिः प्रतीक्ष्यः ।
द्रागेव त्वां यदिह शरणं प्रार्थये कीटकल्पः
तद्विश्वाधीश्वर तव कृपामेव विश्वस्य दीने ॥ २१ ॥

ப்ரஹ்மோபேந்த்ரப்ரப்ருதிபிரபி
ஸ்வேப்ஸித ப்ரார்த்தனாய
ஸ்வாமின்னக்ரே சிரமவஸரஸ்
தோஷயத்பி: ப்ரதீக்ஷ்ய: |
த்ராகேவ த்வாம் யதிஹ
சரணம் ப்ரார்த்தயே கீடகல்ப:
தத் விச்வாதீச்வர தவ
க்ருபாமேவ விச்வஸ்ய தீனே ‖ 21 ‖

(ப - ரை) நீ தீனதயாளு ஆதலால் உன்னை வேண்டுகின்றேன். विश्वाधीश्वर स्वामिन् - ஜகதீச்வரனுகிய பிரபுவே स्वेप्सितप्रार्थनाय- தனது அபீஷ்டங்களை வேண்டிக் கொள்ளுவதற்காக, अग्रे - முன்னின்று, तोषयद्भिः - துதிகளால் திருப்தி செய்விக்கும், ब्रह्मोपेन्द्रप्रभृतिभिरपि -ப்ரஹ்மா விஷ்ணு முதலியவர்களாலும், अवसरः - (எவருடைய) அருள் செய்யும் சமயமானது, चिरं - வெகுகாலம், प्रतीक्ष्यः - எதிர்பார்க்கப் படுகிறதோ (तं) त्वां - அவ்விதமான உன்னை, कीटकल्पः - புழுவுக்கு சமமான நான், द्रागेव - திடீரென்று, शरणं प्रार्थये - சரணம் கொடுக்கும்படி பிரார்த்திப்பது, यत् इह - என்

பது யாதொன்று உண்டோ, तत् - அது, दीने - எளியவனிடத்தில், तव - உன்னுடைய, कृपां - தயவை, विश्वस्य एव – நம்பித் தான்.

(க - ரை) ஏ ஸர்வேசா! ப்ரஹ்மா விஷ்ணு முதலியவர்கள் கூட உன்னிடம் தங்களுடைய அபீஷ்டங்களைத் தெரிவித்து வேண்டிக்கொள்ளும் பொருட்டு உன் வாயிலில் வந்து நின்று துதி செய்து உன்னைக் கண்டுகொள்ள ஸந்தர்ப்பத்தை ஆவலுடன் எதிர் பார்த்து இருக்கும் பொழுது அல்ப பிராணியாகிய நான் நினைத்த மாத்திரத்தில் உன்னை அழைத்து எனக்குச் சரணமளிக்கும்படி வேண்டுகின்றேனே! இந்த உரிமை எனக்கு எப்படிக் கிடைத்ததென்றால் நீ தீனர்களிடம் தயையுடையவன் என்ற பெரியோர் களின் மொழியை நம்பியே யல்லாது வேறு எவ்விதமாகும்?

(வி - ரை) ப்ரம்மதேவன், படைக்கும் திறமை பெறவும், திருமால், பிருந்தையிடம் ஈடுபட்டதனால் கோபித்து மறைந்த திருமகளைத் திரும்பவும் பெறவும், இந்திரன், வ்ருத்ராசுரன் முதலிய பகைவர்களைக் கொல்லத் திறமை பெறவும், சிவனருள் வேண்டியது என்பது புராணங்களில் வெளிப்படையானது.

## —* प्रपदनोपायप्राप्तेः धैर्यावलम्बनम् *—

कर्मज्ञानप्रचयमखिलं दुष्करं नाथ पश्यन्
पापासक्तं हृदयमपि चापारयन्सन्निरोद्धुम् ।
संसाराख्ये पुरहर महत्यन्धकूपे विषीदन्
हस्तालम्बप्रपदनमिदं प्राप्य ते निर्भयोऽस्मि ॥ २२ ॥

கர்மஜ்ஞான ப்ரசய மகிலம்
துஷ்கரம் நாத பச்யந்
பாபாஸக்தம் ஹ்ருதயமபி
சாபாரயன் ஸந்நிரோத்தும் |
ஸம்ஸாராக்யே புரஹர
மஹத்யந்த கூபே விஷீதன்
ஹஸ்தாலம்ப ப்ரபதனமிதம்
ப்ராப்ய தே நிர்ப்பயோஸ்மி || 22 ||

(ப - ரை) சரணுகதி என்னும் ஒரு வழியைப் பெற்றமையால் அச்சமின்றி தைர்யம் கொண்டுள்ளேன் எனக் கூறுகிருர்.

हे पुरहर नाथ - முப்புரமெரித்தவனே! ரக்ஷகனே! अखिलं - சகலமான, कर्मज्ञानप्रचयं - கர்மங்களின் ஞான, அனுஷ்டானங்களை दुष्करं पश्यन् - அஸாத்யமெனக் கண்டு கொண்டவனும், पापासक्तं हृदयमपि - பாபத்தி லேயே ஈடுபட்ட சித்தத்தையும் सन्निरोद्धुं अपरायन् - கண்டித்துத் திருப்பச் சக்தியற்றவனுமாகிய நான், संसाराख्ये - பிறப்பு இறப்பு இவைகளின் தொடர்புடைய ஸம்ஸாரமென்ற, महति अन्धकूपे - பெரிய பாழுங் கிணற்றில், विषीदन् - துயரமுற்று வீழ்ந்து கிடக்கும் போது, इदं - இந்த, ते - உன்னுடைய, हस्तालम्बप्रपदनं - (கரையேற்ற) நீட்டப்பட்ட கைப்பிடியை, प्राप्य - அடைந்து निर्भयः - பயம் நீங்கியவனுக, अस्मि - ஆகிறேன்.

(க - ரை) கர்மாவைச் செய்து சுத்தியடைவதும் ஞானத்தைச் சம்பாதிப்பதும் சிரத்தையினுலும் விடாமுயற்சியினுலும் காலக்கிரமத்தில் ஸாதிக்க வேண்டுவன வாதலால் சோம்பேறியும் சபல புத்தி

யுள்ளவனுமாகிய என்ஞல். அஃதெல்லாம் நிறை வேற்ற முடியாத காரியம் என்பது திண்ணம். துர் வாஸனையினுல் தடுக்கப்பட்ட காரியங்களில் ஊக்க முடைய என் மனத்தையே என்னல் திருப்பமுடிய வில்லையே. இந் நிலையில் ஸம்ஸாரமாகிற பாழுங் கிணற்றில் பரிதபிக்கும் என்னைக் கரையேற்ற உன் கைப்பிடி கிடைத்திருப்பதால் இனி எனக்கு பய மில்லை.

(வி - ரை) தனதுள்ளத்தில் பிரகாசிக்கும் ஈஸ்வர ஸ்வரூபத்தைத் தான் அனுஸந்தானம் செய்வதையே தனக்குக் கிடைத்த கைப்பிடியாக வர்ணிக்கிருர். ஸம் ஸார துக்கங்களுக்கிடையில் உன்னை தர்சிப்பதனுல் பயம் நீங்கியவனுகிறேன் என்று கூறுகிருர்.

## —* जनिमार्गसहायत्वकथनम् *—

त्वामेवैकं हतजनिपथे पान्थमस्मिन्प्रपञ्चे
मत्वा जन्मप्रचयजलधेः बिभ्यतः पारशून्यात् ।
यत्ते धन्याः सुरवर मुखं दक्षिणं संश्रयन्ति
क्लिष्टं घोरे चिरमिह भवे तेन मां पाहि नित्यम् ॥ २३ ॥

த்வாமேவைகம் ஹதஜனிபதே
பாந்தமஸ்மின் ப்ரபஞ்சே
மத்வா ஜன்ம ப்ரசய ஜலதே:
பிப்யதஃ பாரசூன்யாத் ।
யத்தே தன்யா: ஸுரவர முகம்
தக்ஷிணம் ஸம்ச்ரயந்தி
க்லிஷ்டம் கோரே சிரமிஹ பவே
தேன மாம் பாஹி நித்யம் ॥ 23 ॥

(ப-ரை) பிறவி மார்க்கத்தில் உதவி இடைத்த தாகக் கூறுகிறார்.

**सुरवर** - தேவர்களில் முதல்வனே, **अस्मिन् प्रपञ्चे** - இந்த (மாயாமயமான) லோகஸ்ருஷ்டியில், **हतजनिपथे** - கஷ்டங்கள் நிறைந்த பிறப்பு இறப்பென்னும் (சுழன்று வரும்) பாதையில், **त्वां एकमेव** - உன்னை ஒருவனையே, **पान्थं** - துணைவருபவனாக, **मत्वा** - நினைத்து, **पारशून्यात्** - கரையில்லாத, **जन्मप्रचयजलधेः** - பிறவித் தொடரென்ற கடலினின்றும், **बिभ्यतः** - பயங்கொண்ட, **धन्याः** - பாக்ய சாலிகள், **ते** - உன்னுடைய, **यत् दक्षिणं मुखं** - எந்த தென்னோக்கிய முகத்தை, **संश्रयन्ति** - அடைகின்றார் களோ, **तेन** - அம் முகத்தால், **इह** - இப் பிரபஞ்சத்தில், **चिरं** - வெகு காலமாக, **घोरे भवे** - பயங்கரமான ஸம்ஸா ரத்தில், **क्लिष्टं मां** - கஷ்டப்படும் என்னை, **नित्यं पाहि** - அவசியம் காப்பாற்றுவாயாக.

(க-ரை) ஜன்மத்திற்குப் பின் ஜன்மமாக எடுத் துக்கொண்டு ஸம்ஸாரமென்ற முடிவற்ற பாதையில் அவதிப் பட்டுக்கொண்டு போய்க்கொண்டிருக்கும் ஜீவனுடன் அந்தராத்மாவான ஈசன் ஒருவனே துணை யாகக் கூடவே போய்க்கொண்டிருக்கிறார். இவ்விதம் ஜீவனுக்கு துணைவரும் பரமாத்மாவே **மார்க்கபந்து** ஆகிறார். பிறவிக் கடலினின்றும் கரையேற நிச்சயித்த பெரியோர்கள் அவர் தம் துணையாருக்கும் பகவானின் பஞ்ச முகங்களில் தென்னோக்கியதான அகோர முகத்தை சரணமடைந்து முக்தி யடைகிறார்கள். தீக்ஷிதர் அவர்கள் பாரத்வாஜகோத்தரத்தில் பிறந்த வர். ஆதலால் தன் குலத்திற்கு முதல்வரான பரத் வாஜ முனிவரின் வரலாற்றைத் தெரிந்து கொண்டு

அதைத் தானும் பின்பற்ற நினைக்கிறார். பரத்வாஜ முனிவர் ஐந்து முகமுடைய பரமேச்வரனின் அகோர முகத்தின் மூலம் சிவதீக்ஷை பெற்றார் என்பது ஐதிஹ்யம். பரத்வாஜ முனிவரைக் கரையேற்றிய அகோர முகத்தால் என்னையும் கரையேற்றுவாயாக என்று ப்ரார்த்திக்கிறார்.

(வி - ரை) ऋतं पिबन्तौ सुकृतस्य लोके गुहां प्रविष्टौ परमे परार्ध्ये ॥ द्वा सुपर्णा सयुजा सखायौ समानं वृक्षं परिषस्वजाते ॥ என்ற இரு உபநிஷத் வாக்கியங்கள் ஈசன் மார்க்கபந்துவாய் உடனிருக்கிறான் என்பதை உணர்த்துகின்றன. நீலகண்ட தீக்ஷிதர் घोरं भवमपहातुं केचिद्घोरं भवं प्रपद्यन्ते । कृतदीक्षोऽघोरमुखे कुलकूटस्थो भरद्वाजः ॥ என்ற சுலோகத்தினால் பாரத்வாஜர் அகோர முகத்தில் தீக்ஷை பெற்று வீடுபெற்றமையைத் தெரிவிக்கிறார். गुहां प्रविष्टौ आत्मानौ हि तद्दर्शनात् என்ற ப்ரஹ்ம ஸூத்ரத்திலும் ஈசன் உடனிருப்பதாகக் கூறப்பட்டுள்ளது. यथा राहुरदृश्योऽपि दृश्यते रविमण्डले । तद्वत्सर्वगतोऽप्यात्मा लिङ्गदेहे तु दृश्यते ॥ निश्चलः परिपूर्णोऽपि गच्छतीत्युपचर्यते । என்றும் பாத்ம புராணம் கூறுகிறது.

## —* क्लेशदैन्यनिरूपणपूर्विका प्रपत्तिः *—

एकोऽसि त्वं शिव जनिमतामीश्वरो बन्धमुक्त्योः
क्लेशाङ्गारावलिषु लुठतः का गतिस्त्वां विना मे ।
तस्मादस्मिन्निह पशुपते घोरजन्मप्रवाहे
खिन्नं दैन्याकरमतिभयं मां भजस्व प्रपन्नम् ॥ २४ ॥

ஏகோஸி த்வம் சிவ ஜனிமதாமீச்வரோ
பந்த முக்த்யோ:
க்லேசாங்காராவலிஷு லுடத:
கா கதிஸ்த்வாம் விநா மே |
தஸ்மா தஸ்மிந்நிஹ பசுபதே
கோர ஜன்மப்ரவாஹே
கின்னம் தைன்யாகரமதிபயம் மாம்
பஜஸ்வ ப்ரபன்னம் ‖ 24 ‖

(ப - ரை) கிலேசத்தையும் தாழ்மையையும் தெரிவித்துச் சரணமடைகிறார்.

शिव – ஏ சிவபிரானே, जनिमतां – பிறவியுடையவர்களுக்கு, बन्धमुक्त्योः - பந்தம் மோக்ஷம் இவ்விரண்டிற்கும், ईश्वरः - பிரபுவாயிருப்பவன், एकः त्वं असि - நீ ஒருவன் தான். क्लेशाङ्गारावलिषु - துன்பங்களாகிற தணல் கும்பல்களின் மேல், लुठतः - புரளுகின்ற, मे - எனக்கு, त्वां विना - உன்னைவிட்டு, का गतिः - வேறு புகலிடம் ஏது? तस्मात् - ஆகையினால், पशुपते - பசுக்களுக்கு (ஜீவர்களுக்கு) பதியானவனே, अस्मिन् इह घोरजन्मप्रवाहे - இந்த பயங்கரமான ஜனனத் தொடரில், खिन्नं - துன்பமடைந்தவனும், दैन्याकरं - எளிமை யடைந்தவனும், अतिभयं அதிக பயம் கொண்டவனும், प्रपन्नं – சரண மடைந்தவனுமான, मां - என்னை, भजस्व - வந்து ரக்ஷிப்பாயாக.

(க - ரை) பசுக்கள் என்று சொல்லப்படும் ஜீவராசிகளை மாயாபந்தத்தால் கட்டிவைப்பவனும் அதனின்று அவிழ்த்து விடுபவனும் பசுபதி யாகிற நீயே. ஆதலால் உன்னைத் தவிர வேறு யாரை நான் அடைக்கலம் புகவிரும்புவேன். இந்த வாழ்க்கைத் துன்பங்களில், நெருப்புத் தணலில் விழுந்து விட்டவன்போல

வேதனையால் துடிக்கும் என்னை, மிகப் பரிதாபமான நிலைக்கு இருப்பிடமான என்னை, மனத்தில் மிகுந்த பீதி யடைந்த என்னை, அடுத்தடுத்து பிரவாஹம் போல எனக்கு ஏற்படும் இந்தப் பிறவித் தொடரி லிருந்து விடுவிக்கும் பொருட்டு கருணை கூர்ந்து உடனே ஓடிவந்து ரக்ஷிக்க வேண்டும்.

(வி - ரை) तमीश्वराणां परमं महेश्वरं तं देवतानां परमं च दैवतम् । पतिं पतीनां परमं पुरस्तात् विदाम देवं भुवनेशमीड्यम् ॥ என்று ஈச்வரத் தன்மை சிவனுக்கே உரியது என உபநிஷத் சொல்லுகின்றது. சைவ சாஸ்திரங் களில், மலம், மாயா, கர்ம, தத்வதிரோதானம் என்று சொல்லப்பட்ட கிலேசங்களே இங்கு கிலேசத்தனல் எனக் குறிக்கப்பட்டது. பாரதத்தில், ईश्वरश्चेतना कर्ता पुरुषः कारणं शिवः - எனவும், காளிதாஸன் நூல்களில், महेश्वरस्त्र्यम्बक एव नापरः, शब्दमीश्वर इत्युच्चैः सार्धचन्द्रं बिभर्ति यः, यस्मिन्नीश्वर इत्यनन्यविषयः शब्दो यथार्थाक्षरः - எனவும், புராணங்களில், एक एव हि मुख्योऽयमीश्वरः श्रुतिचोदितः - எனவும் கூறப்பட்டுள்ளது. பாதஞ்ஜல யோக ஸூத்திரத்தில், அவித்யா, அஸ்மிதா, ராகம், த்வேஷம், அபிநிவேசம் என ஐந்துவித க்லேசங்கள் கூறப்பட்டுள்ளன.

## —※ श्रीरुद्रप्रभावकथनपूर्विका विद्याप्रार्थना ※—

यो देवानां प्रथममशुभद्रावको भक्तिभाजां
पूर्वं विश्वाधिक शतधृतिं जायमानं महर्षिः ।
दृष्ट्यापश्यत्सकलजगतीसृष्टिसामर्थ्यदात्र्या
स त्वं ग्रन्थिप्रविलयकृते विद्यया योजयास्मान् ॥ २५ ॥

யோ தேவானும் ப்ரதமமசுப
த்ராவகோ பக்திபாஜாம்
பூர்வம் விச்வாதிக சதத்ருதிம்
ஜாயமானம் மஹர்ஷிঃ |
த்ருஷ்ட்யாபச்யத் ஸகலஜகதீ
ஸ்ருஷ்டி ஸாமர்த்ய தாத்ர்யா
ஸ த்வம் க்ரந்தி ப்ரவில்யக்ருதே
வித்யயா யோஜயாஸ்மான் || 25 ||

(ப - ரை) ருத்ரனின் பெருமையைக் கூறி ப்ரம்ம வித்யையைக் கொடுத்தருளும்படி வேண்டுகிறார்.

**विश्वाधिक** - எல்லாவற்றிற்கும் மேலானவனே தானுகவே எல்லாவற்றையும் அறிந்தவர்களுள் பெரியவனும், **भक्तिभाजां** தன்னிடம் பக்தி செய்பவர்களுக்கு, **अशुभद्रावकः** - ஸம்ஸார துக்கத்தைப் போக்கடிப்பவனுமான, **यः**-எவன், **देवानां**-தேவர்களுக்கு, **प्रथमं**-முதலாக, **जायमानं**-உண்டாகின்ற, **शतधृतिं**-ப்ரம்மதேவனை, **सकलजगती सृष्टिसामर्थ्य दात्र्या** -எல்லாவுலகங்களையும் சிருஷ்டி செய்யும் திறமை அளிக்கக்கூடிய, **दृष्ट्या** - கடாக்ஷத்தினுல், **अपश्यत्** - பார்த்தானே, **सः त्वं** - அந்த நீ, **ग्रन्थिप्रविलयकृते** - முடுச்சுக்களின் நிவ்ருத்தியின் பொருட்டு, **अस्मान् विद्यया योजय** - எங்களுக்கு ஞானத்தை அளிப்பாயாக.

(க - ரை) கோடைக்காலத்தில் மண்ணில் விளையாடும் துஷ்டக் குழந்தையை தாயார் அடித்துப் பாலூட்டி கட்டிலில் தூங்க வைப்பது போல ஸம்ஸார துக்கத்தினுல் துவண்டுபோன ஜீவர்களைத் தண்டித்து அவர்களுடைய வினைப்பயனை அனுபவிக்கச் செய்து களைப்பாறச் செய்வதற்காக தாயினும் நூறுமடங்கு அன்பு கொண்ட ஈச்வரன் ருத்ரரூபியாகி ஸம்

ஹார காரியத்தைச் செய்கிருர். பிறகு சிறிது காலம் கழித்து மறுபடியும் எழுப்பி போகங்களை அனுபவிக்கச் செய்கிருர். ஈசன் ஸர்வஜ்ஞன், ஸம்ஸாரத்தினுண்டாகும் ஸகலவித துக்கங்களையும் விலக்குகிறவர். ஆதலால் முதலில் உண்டாகும் ப்ரம்மதேவனை அருளோடு நோக்குகிருர். இதுவே சாக்ஷுஷ தீக்ஷையாகும். குரு திருஷ்டி மாத்திரத்தினுல் தன்னிடமுள்ள ஞானத்தை சிஷ்யனிடம் தோற்றுவிப்பது சாக்ஷுஷதீக்ஷை எனப்படும். இதனுல் ப்ரம்மதேவனுக்கு ஸகல உலகங்களையும் படைக்கும் திறமையுண்டாகிறது. இவ்விதமுள்ள ஈசன் எனக்கு ப்ரம்ம விஷ்ணுருத்ர கிரந்திகள் என்ற முக்தி மார்க்கத்திலுள்ள முட்டுக் கட்டைகளை நீக்குவதற்காக நான் சிவஜ்ஞானம் பெறும்படி கருணை செய்யவேண்டும்.

(வி - ரை) இந்த ஸ்லோகம், **यो देवानां प्रथमं पुरस्तात् विश्वाधिको रुद्रो महर्षिः। हिरण्यगर्भं पश्यति जायमानं स नो देवः शुभया स्मृत्या संयुनक्तु** என்பது முதலிய வேத வாக்கியங்களின் வ்யாக்யான ரூபமாயும், அதே பதங்கள் அமைந்ததாயும் காணப்படுதல் கவனிக்கத் தக்கது. **अशुभद्रावकः** - என்ற பதம் ருத்ரபதத்தின் விரிவுரையாகும். சைவ ஸித்தாந்த ஸாரத்தில்.

> विश्रान्त्यै भविनां च खिन्नमनसां पाकाय कर्मावलेः
> मायावाग्बलसंभवाय कुरुते शम्भुर्यदा संहृतिम् ।
> शिष्यन्ते पशवः सशक्तिरमलः शम्भुश्च मायाद्वयं
> सृष्ट्याद्यं कुरुते ततश्च दयया भोगाय पुंसां पुनः ॥

என்று பிரளயமும், மறுபடி ஸ்ருஷ்டியும் அதன் காரணமும் கூறப்பட்டுள்ளது. ஸ்காந்தத்தில், **दीपनात्**

आत्मबोधस्य क्षारणात्तमसोऽस्य च। दीक्षाशब्देन कथितं गुरोः साक्षान्निरीक्षणम् ॥ எனவும், ददाति शिवतादात्म्यं क्षिणोति च मलत्रयम्। अतो दीक्षेति सा प्रोक्ता दीक्षाशब्दार्थवेदिभिः॥ என்று புருஷார்த்த போதத்திலும் தீக்ஷாசப்தார்த்தம் கூறப்பட்டுள்ளது. தீக்ஷை மூன்று விதம். மாந்த்ரிகீ, ஸ்பார்சிகீ, சாக்ஷுஷீ என்றும் பரசுராம ஸூத்திரத்தில், चक्षुरुन्मील्य यस्तत्त्वं ध्यात्वा शिष्यं निरीक्षते। पशुपाशविमोक्षाय दीक्षेयं चाक्षुषी मता ॥ என்பது முதலியவற்றால் தீக்ஷையின் வகைகளும் கூறப்பட்டுள்ளன. மேலும் ஆணவீ, சாக்தீ, சாம்பவீ என வேறு வகையாகவும் தீக்ஷை பிரிக்கப்பட்டுள்ளது. देवासुराः संयत्ता आसन् என்னுமிடத்தில், रोदिति इति रुद्रः என்று ருத்ர சப்தத்திற்கு அக்னி என்று பொருள் சொல்லப்பட்டது. இங்குள்ள ருத்ரசப்தம், रुधिर् आवरणे, என்ற தாதுவிலிருந்து ஆவரண பூதமான அஜ்ஞானத்தை, द्रावयति (விரட்டியடிக்கிறது) என்று பொருள் கொண்டது.

—* दुःखतरणस्य शिवज्ञानैकमूलत्वकथनम् *—

यद्याकाशं शुभद मनुजाश्चर्मवद्वेष्टयेयुः
दुःखस्यान्तं तदपि पुरुषस्त्वामविज्ञाय नैति।
विज्ञानं च त्वयि शिव ऋते त्वत्प्रसादान्न लभ्यं
तद्दुःखार्तः कमिह शरणं यामि देवं त्वदन्यम् ॥ २६ ॥

யத்யாகாசம் சுபத
மனுஜாஶ்சர்மவத் வேஷ்டயேயு:
து:கஸ்யாந்தம் ததபி புருஷஸ்
த்வாமவிஜ்ஞாய நைதி।

விஜ்ஞானம் ச த்வயி சிவ
ருதே த்வத் ப்ரஸாதாந்ந லப்யம்
தத்துக்கார்த்த: கமிஹ சரணம்
யாமி தேவ த்வதன்யம் ‖ 26 ‖

(ப-ரை) துக்கத்தினின்றும் கரையேற சிவஜ்ஞானமே காரணமாகும் எனக் கூறுகிறார். शुभद - க்ஷேமத்தை யளிப்பவனே मनुजाः - மனிதர்கள் आकाशं - வானத்தை चर्मवत् - தோலைப்போல यदि वेष्टयेयुः तदपि சுருட்ட வல்லவர்களாயினும் त्वां - (पुरुषं) - பரமாத்மாவாகிய உன்னை अविज्ञाय - அறியாமல் दुःखस्य अन्तं - ஸம்ஸார துக்கத்தின் நிவ்ருத்தியை पुरुषः - ஒரு மனிதனும் न एति - அடைகிறது இல்லை. शिव - சிவனே त्वयि च विज्ञानं - உன் விஷயமான ஞானமோ त्वत्प्रसादात् ऋते - உன்னுடைய அருளின்றி न लभ्यं - அடையக் கூடியதல்ல. तत् - ஆகையால் दुःखार्तः - துக்கத்தால் பீடிக்கப்பட்ட நான் इह - இந்த நிலைமையில் त्वदन्यं - உன்னைத் தவிர कं देवं - எந்த தெய்வத்தை शरणं यामि - சரணமடைவேன்.

(க - ரை) வானத்தைப் பாய்போல் சுருட்டுவது முற்றிலும் முடியாத காரியம். இந்த மானிடவர்க்கம் அதையும் ஸாதித்து விட்டாலும் சாதித்து விடலாம். ஆனால் உன்னை யறியாமல் துக்கத்தை மட்டும் கடக்க முடியாது. உன்னை யறிவது என்பதோ உன் கருணையினாலல்லது கிடைக்கக் கூடியதல்ல, ஆதலால் துக்கத்தைக் கடக்க விரும்பும் நான் உன்னைச் சரணமடைவதைத் தவிர வேறு

வகையறியேன். ஆதலால் உன்னருளைப்பெற உன்னையே சரணமடைகிறேன். வேறு யாரைச் சரணமடைய முடியும்.

(வி - ரை) तमेवं विद्वानमृत इह भवति । नान्यः पन्था अयनाय विद्यते । तरति शोकमात्मवित् । य एतद्विदुरमृतास्ते भवन्ति । तत्र को मोहः कः शोकः एकत्वमनुपश्यतः என்பன ஞானமே மோக்ஷ ஸாதனம் என்பதை வலியுறுத்துவன. அவனருளாலே அவன் தாள் போற்றி என்றார் பெரியோர்களும்.

## —※ शिवप्रसादाद्विद्याया मोक्षसाधनत्वकथनम् ※—

किं गूढार्थैरकृतकवचोगुम्फनैः किं पुराणैः
तन्त्राद्यैर्वा पुरुषमतिभिर्दुर्निरूप्यैकमत्यैः ।
किं वा शास्त्रैरफलकलहोल्लासमात्रप्रधानैः
विद्या विद्येश्वर कृतधियां केवलं त्वत्प्रसादात् ॥ २७ ॥

கிம் கூடார்த்தை: அக்ருதகவசோ
கும்பநை: கிம் புராணை:
தந்த்ராத்யைர்வா புருஷமதிபி:
துர்நிருப்யைகமத்யை: ।
கிம்வா சாஸ்த்ரைரபல
கலஹோல்லாஸ மாத்ர ப்ரதானை:
வித்யா வித்யேச்வர க்ருததியாம்
கேவலம் த்வத்ப்ரஸாதாத் ‖ 27 ‖

(ப - ரை) சிவனருளால் ஞானம் மோக்ஷஸாதனமாம் என்று கூறுகிறார். विद्येश्वर - ஸகல வித்யாதிபதியே गूढार्थैः - மறைந்து கிடக்கும் தாத்பர்யமுள்ள

अकृतकवचोगुम्फनैः - ச்ருதி வாக்யங்களினால் किं - யாது பயன். पुराणैः किं - புராணங்களால் என்ன பயன். पुरुषमतिभिः - மனித புத்தியினால் दुर्निरूप्यैकमत्यैः - ஒற்றுமைப்படுத்த முடியாத முரண்பட்ட கொள்கைகளைக் கொண்ட तन्त्राद्यैः वा किम् - சமய நூல், மதாசாரங்கள் இவைகளால் தான் யாது பயன்? अफलकलहोल्लासमात्रप्रधानैः - வீணான கலஹத்தில் குதூஹலத்தையே பிரதானமாகவுடைய शास्त्रैः वा - சாஸ்திரங்களால் தான் किं फलं என்ன பயன்? कृतधियां - அறிவாளிகளுக்கு विद्या - ஞானசம்பத்து त्वत्प्रसादात् केवलं - உன் அருளினாலே தான் (ஏற்படக்கூடியதே ஒழிய மற்ற வழிகளால் பெறத்தக்கதல்ல).

(க-ரை) உலகத்தில் சுருதி, ஸ்ம்ருதி, புராணம், தாந்த்ரிக சமய நூல்கள், கலைகள், சாஸ்திரங்கள் என்று பலவிதமான வித்யைகள் ப்ரசாரத்திலிருக்கின்றன. இந்த வித்யைகளைக் கற்றுணர்ந்து மனிதன் யாதொருவித பலனையும் அடைவதில்லை. சுருதிகள் என்ற வேதங்களின் தாத்பர்யத்தைக் கண்டுபிடிப்பதே ஸாத்ய மில்லாமலிருக்கிறது. அது மறை பொருளாயிருப்பதால் புராணங்கள் மத விசார நூல்கள் எல்லாம் பரஸ்பரம் விரோதமான வழிகளைப் பின்பற்றுகின்றன. சாஸ்திர ஞானமே வாதி பிரதி வாதி கக்ஷி பிரதி கக்ஷி என்ற ரீதியில் பிரசண்ட கோலாஹலங்கள் செய்யப் பயன் படுகின்றனவேயன்றி வேறு பயன் அவைகளால் ஏற்படுவதில்லை. உண்மையான அத்வைத ஜ்ஞானம் உன் அருளால் ஏற்பட வேண்டுமே யொழிய வேறு வழியில்லை. ஸர்வவித்யைகளுக்கும் ஈசனாகிய நீயே ஞானத்தை யளிப்பவன்.

(வி - ரை) अङ्गानि वेदाश्चत्वारो मीमांसा न्यायविस्तरः पुराणं धर्मशास्त्रं च विद्या ह्येताश्चतुर्दश ॥ आयुर्वेदो धनुर्वेदो गान्धर्वश्चेत्यनुक्रमात् । विद्या ह्यष्टादश स्मृताः என்று கூறப்பட்டன வித்யைகள்.

सर्गश्च प्रतिसर्गश्च वंशो मन्वन्तराणि च । वंशानुचरितं चेति पुराणं पञ्चलक्षणम् - என்று கூறப்பட்ட லக்ஷண முடைய பதினெண் புராணங்கள் சைவம், பாசுபதம் காபாலம், பாஞ்சராத்ரம் முதலியன தந்திரங்கள் அக்னி ஸ்தம்பனம், ஜல ஸ்தம்பனம் முதலியன கலைகள்

परमाद्वैतविज्ञानं प्रसादादेव नान्यथा । प्रसादे सति कीटो वा पतङ्गो वाऽथ वानरः । देवो वा दानवो वापि लभते ज्ञानमुत्तमम् ॥ என்பது ப்ரஹ்ம வசனம். एष ह्येव साधु कर्म कारयति तं, यमेभ्यो लोकेभ्य उन्निनीषते என்பது உபநிஷத் तामविद्यां तथाभूतां भगवान् परमेश्वरः । संहरत्युदयन्नेव सहस्रांशुस्तमो यथा ॥ என்பது ஈசன் அஜ்ஞானத்தை விலக்குகிறான் என்பதையும் உணர்த்துகிறது

## —※ शरणागतदीनोपेक्षणमयुक्तमिति प्रार्थना ※—

पापिष्ठोऽहं विषयचपलः सन्ततद्रोहशाली
कार्पण्यैकस्थिरनिवसतिः पुण्यगन्धानभिज्ञः ।
यद्यप्येवं तदपि शरण त्वत्पदाब्जं प्रपन्नं
नैनं दीनं स्मरहर तवोपेक्षितुं नाथ युक्तम् ॥ २८ ॥

பாபிஷ்டோஹம் விஷயசபல:
ஸந்ததத்ரோஹசாலீ
கார்பண்யைக ஸ்திரநிவஸதி:
புண்யகந்தாநபிஜ்ஞ: |

யத்யப்யேவம் ததபி சரணம்
த்வத்பதாப்ஜம் ப்ரபன்னம்
நைநம் தீனம் ஸ்மரஹர
தவோபேக்ஷிதும் நாத யுக்தம் ‖ 28 ‖

(ப-ரை) சரணமடைந்த தீனனை கவனியாம லிருப்பது தகுதியில்லை என வேண்டுகிறார். स्मरहर- மன்மத ஶத்ருவே अहं - நான் - पापिष्ठः - மிகவும் பாபங் களைச் செய்வதில் முனைந்தவன். विषयचपलः - போக வஸ்துக்களில் சபல முடையவன். सन्ततद्रोहशाली - சுருதி ஸ்மிருதி தேவகுருக்களின் விதிகளை எப்பொழு தும் மீறுகிறவன். कार्पण्यैकस्थिर निवसतिः - அற்ப புத்தி யுடன் கிலேசப்பட்டு வாழ்க்கை நடத்துவதையே மாருத லக்ஷ்யமாக வுடையவன். पुण्यगन्धानभिज्ञः - புண் ணிய மென்பதை எள்ளளவும் செய்தறியாதவன். यद्यप्येवं तदपि - நான் இவ்விதம் இருந்தபோதிலும் त्वत्पदाब्जं - உன் திருவடித் தாமரைகளை शरणं प्रपन्नं - சரணமடைந்த दीनं एनं - எளியவனுகிய என்னை उपेक्षितुं உதாஸீனம் செய்ய हे नाथ - ஓ ஸ்வாமியே तव न युक्तं - உனக்கு நியாயமில்லை.

(க-ரை) எவ்வளவு குற்றமுள்ளவனுக இருந்தா லும் சரண மடைந்தவனை ரக்ஷிப்பது ஈசனின் இயல்பு. ஆகையால் தன்னிடத்தில் பாபங்களைச் செய்வதில் தீவிரமான ப்ரவ்ருத்தியும், புண்ணிய லேசத்தையும் செய்யாத சுபாவமும் இருந்தாலும், தேகத்தையே ஆத்மா என்று நம்பினதால் ஈசுவரனின் உபதேசம் வேத மொழிகள் ஆசார்ய வாக்யங்கள் இவைகளை அலக்ஷ்யம் செய்த துரோஹியாகி விட்டாலும் ஸம் ஸார வாழ்க்கையில் குடும்ப ரக்ஷணத்திற்காகப் பற்

பல அற்ப காரியங்களில் ஈடுபட்டு மிகவும் கீழ்ப்பட்ட நிலையிலிருந்தாலும் சரணாகத ரக்ஷகனாகிய ஈசன் தன்னைக் காப்பாற்றியே ஆகவேண்டுமென வற்புறுத்துகிறார்.

(வி - ரை) பல வகையான, வேதோல்லங்கனம், ஆசார்யவசனோல்லங்கனம், தேஹாத்ம புத்தி முதலிய துரோகங்கள் இருப்பதால் ஸந்தத த்ரோஹி என்றார். எவ்வித மிருப்பினும் என்னைக் காப்பாற்றாவிடில் உன்னுடைய ஈச்வரத்தன்மைக்கு இழுக்காகும். எனவே நிச்சயம் காப்பாற்றவேண்டுமென வற்புறுத்துகிறார்.

## —※ अनङ्गीकारेऽगतिकत्वकथनम् ※—

आलोच्यैवं यदि मयि भवान् नाथ दोषाननन्तान्
अस्मत्पादाश्रयणपदवीं नार्हतीति क्षिपेन्माम् ।
अद्यैवेमं शरणविरहाद्विद्धि भीत्यैव नष्टं
ग्रामो गृहत्याहिततनयं किं नु मात्रा निरस्तम् ॥ २९ ॥

ஆலோச்யைவம் யதி மயி பவான்
நாத தோஷாநநந்தான்
அஸ்மத்பாதாச்ரயணபதவீம்
நார்ஹதீதி க்ஷிபேன்மாம் ।
அத்யைவேமம் சரணவிரஹாத் வித்தி
பீத்யைவ நஷ்டம்
க்ராமோ க்ருஹ்ணாத்யஹிததனயம்
கின்னு மாத்ரா நிரஸ்தம் ॥ 29 ॥

(ப - ரை) நீ என்னை ஏற்காவிடில் நான் கதியற்ற வனாவேன் என்கிறார்.

नाथ - இறைவனே एवं - இவ்விதம் मयि - என்னிடத்தில் अनन्तान् दोषान् - கணக்கற்ற குற்றங்களை आलोच्य - ஆராய்ந்து பார்த்து अस्मत्पादाश्रयणपदवीं - நம் சரணத்தைப் பற்றிக்கொள்ளும் தன்மைக்கு नार्हति - இவன் தகுந்தவனல்ல इति - என்று भवान् - தாங்கள் मां - என்னை यदि क्षिपेत् - தள்ளி விட்டால் शरणविरहात् - வேறு சரணமடைய வழியில்லாமல் अद्यैव - இப்பொழுதே भीत्या एव - பயத்தினாலேயே इमं नष्टं विद्धि இவன் விநாசம் அடைந்தவன் ஆவன் என்று நிச்சயித்துக் கொள்ளவும். मात्रा - தாயினால் निरस्त - துரத்தப்பட்ட अहिततनयं - பெற்றோர்களுக்குப் பிரதிகூலமான நடத்தையுடைய பிள்ளையை ग्रामः किन्नु गृह्णाति - கிராமத்திலுள்ளோர் காக்க முன்வருவார்களா?

(க - ரை) என் குற்றங்களையே எண்ணி இவன் நம்மிடம் சரண்புக யோக்யன் அல்லன் என்று என்னை நீ உதைத்துத்தள்ளி விடுவாயானால் வேறு வகை தெரியாமல் இந்த க்ஷணமே நான் பயத்தினால் ஹ்ருதயம் வெடித்துப் போய்விடுவேன். தாய் வேண்டாமென்று தள்ளிய துஷ்டப்பிள்ளையை உலகத்தில் யார் ஏற்றுக் கொள்ளுவார்கள்.

(வி - ரை) मातेव पुत्रान् रक्षस्व என்பது பிரச்னோபநிஷத். शतापराधिनमपि पुत्रं माता न हि त्यजेत् என்று ஆன்றோரும், त्वं हि नः पिता योऽस्माकमविद्यायाः परं पारं तारयसि என்றும் पितेव पुत्रमभिरक्षतादिमम् என்றும் உள்ள வேத வாக்யங்களும் கவனிக்கவேண்டியன.

—※ भरन्यासपूर्वकप्रार्थना ※—

क्षन्तव्यं वा निखिलमपि मे भूतभावि व्यलीकं
दुर्व्यापारप्रवणमथवा शिक्षणीयं मनो मे ।
न त्वेवार्त्या निरतिशयया त्वत्पदाब्जं प्रपन्नं
त्वद्विन्यस्ताखिलभरममुं युक्तमीश प्रहातुम् ॥ ३० ॥

க்ஷந்தவ்யம் வா நிகிலமபி மே
பூதபாவி வ்யலீகம்
துர்வ்யாபார ப்ரவணமதவா
சிக்ஷணீயம் மனோ மே ।
ந த்வேவார்த்யா நிரதிசயயா
த்வத் பதாப்ஜம் ப்ரபன்னம்
த்வத் வின்யஸ்தாகில பரமமும்
யுக்தமீச ப்ரஹாதும் ॥ 30 ॥

(ப-ரை) ஸகல பாரங்களையு மீசனிடம் இறக்கி விட்டு வேண்டுகிறார்.

ईश - ஸ்வாமி मे - என்னுடைய भूतभावि - இறந்த காலத்திலும் வருங்காலத்திலு முண்டான निखिलं व्यलीकं - எல்லா பாபங்களையும் क्षन्तव्यं वा - மன்னித்தலாவது வேண்டும். अथवा - அல்லது दुर्व्यापारप्रवणं - நிஷித்த ஆசாரங்களில் ப்ரவ்ருத்தி யுடைய मे - எனது मनो वा - மனதையாவது शिक्षणीयं - அடக்கு முறைகளால் சிக்ஷிக்க வேண்டும். निरतिशयया - அதிதீவ்ரமான आर्त्या - மனோவேதனையால் त्वत्पदाब्जं - உனது திருவடிகளை प्रपन्नं - சரணமடைந்த त्वद्विन्यस्ताखिलभरं - உன்னிடத்தில் ஸகல பாரத்தையுமிறக்கிய अमुम् - இந்த என்னை प्रहातुं - கைவிடுவதற்கு न त्वेव युक्तं - உனக்கு நியாயமே ஆகாது.

(க-து) என்னை குற்றமுள்ளவனென்று தள்ளுவது உனக்கு அழகல்ல. என் குற்றங்களை மன்னித்தாவது அல்லது என் குற்றங்களுக்கேற்ற தண்டனையை விதித்தாவது என்னை உன் கிருபைக்குத் தகுந்தவனாகச் செய்து அங்கீகரிக்கத்தான் வேண்டும். மிக்க வருந்தி நீயே கதியென்று உன் காலடியில் விழுந்து உன்னிடமே ஸகல பாரத்தையும் ஒப்படைத்த ஒரு ஏழையை நிராகரிப்பது உன் பெருமைக்கு இழுக்கன்றோ? பாரத்தை ஈச்வரனிடம் ஒப்புவித்தலாவது, தான் என்ற அபிமானத்தை விட்டு, செய்பவன் செய்விப்பவன் எல்லாம் அந்தர்யாமியான பரமேச்வரனே என்று நம்பி எல்லாப் பொறுப்புகளையும் அவனிடமே சுமத்தி யிருத்தலாகும்.

(வி - ரை) यदि संन्यस्य कर्माणि युक्त आसीत मत्परः। मदर्थमपि कौन्तय ॥ என்பது கீதை. ऐष ह्येव साधु कर्म कारयति तं यमेभ्यो लोकेभ्य उन्निनीषते என்பது உபநிஷத்.

## —* सर्वज्ञत्वदयानिधित्वादिकारणोपपादनम् *—

सर्वज्ञस्त्वं निरुपधिकृपासागरः पूर्णशक्तिः
कस्मादेनं न गणयसि मामापदब्धौ निमग्नम् ।
एकं पापात्मकमपि रुजा सर्वतोऽत्यन्तदीनं
जन्तुं यद्युद्धरसि शिव कस्तावतातिप्रसङ्गः ॥ ३१ ॥

ஸர்வஜ்ஞஸ்த்வம் நிருபதி
க்ருபாஸாகர: பூர்ணசக்தி:
கஸ்மாதேனம் ந கணயஸி
மாமாபதப்தௌ நிமக்நம் ।

ஏகம் பாபாத்மகமபி ருஜா
ஸர்வதோத்யந்த தீனம்
ஜந்தும் யத்யுத்தரஸி சிவ
கஸ்தாவதாதி ப்ரஸங்க: ‖ 31 ‖

(ப-ரை) முற்றுமுணர்ந்த கருணைக் கடலாதலால் காத்தல் அவசியம் எனக் கூறுக்கிறூர். शिव-சிவனே त्वं-நீ सर्वज्ञः-எல்லாமறிந்தவன், निरुपधिकृपासागरः-எல்லையற்ற கருணைக் கடலாகியவன். पूर्णशक्तिः-நிரம்பிய சக்தியுடையவன். आपदब्धौ-ஆபத்துக்கடலில் निमग्नं-மூழ்கிய एनं मां-இந்த என்னை कस्मात्-ஏன் न गणयसि கவனிக்கவில்லை. पापात्मकमपि-பாபியான ஹ்ருதயமுடையவனுயினும் रुजा வேதனையினுல் सर्वतः எல்லா விதத்திலும் अत्यन्तदीनं-மிகவும் திக்கற்ற एकं जन्तुं-ஒரு பிராணியை यदि उद्धरसि-நீ கை தூக்கிவிடுவாயாலுல் तावता-அம்மட்டில் तव-உனக்கு कः என்ன अतिप्रसङ्गः முறைத்தவறு (ஏற்படும்).

(க-ரை) ஆபத்தில் மூழ்கிக்கிடக்கும் என்னை பரிபூர்ணசக்தியுடைய நீ ரக்ஷிக்காமல் இருக்கலாமா? நீ ஸர்வேச்வரனுதலால் வேறு ஒருவரின் உத்தரவைப் பெற்றுத்தான் என்னை காப்பாற்றவேண்டுமென்பதில்லை. நீ ஸர்வஜ்ஞனுதலால் என் கஷ்டதசையை அறியாமலில்லை. நீ கருணைக்கடலாதலால் என்பால் இரங்கக் கூடாதவனில்லை. நான் பாபி என்றுலும் பலவிதத்திலும் பொறுக்க முடியாத துன்பங்களை அநுபவித்து மிக்க பரிதாப நிலையை அடைந்திருக்கும் என்னை ஒருவனை மட்டும் காப்பாற்றிவிட்டால் உனக்கு என்ன குடிமூழ்கிப்போய்விடும். இதைச்சற்று ஆலோசித்துப் பார்.

(வி - ரை) यः सर्वज्ञः सर्ववित्, परास्य शक्तिर्विविधैव श्रूयते । என்பது உபநிஷத். பாரதத்தி ज्ञानानि च वशे यस्य तारकादौत्यशेषतः । கங்காதரணம், காலகூட விஷமுண்டல் முதலியவற்றால் ஸர்வசக்தியும், மிகுந்த தயையும் கண்டு கொள்க.

—* क्षुण्णा चैवं प्रार्थनारीतिरित्याह *—

अत्यन्तार्तिव्यथितमगतिं देव मामुद्धरेति
क्षुण्णो मार्गस्तव शिव पुरा केन वाऽनाथनाथ ।
कामालम्बे बत तदधिकां प्रार्थनारीतिमन्यां
त्रायस्वैनं सपदि कृपया वस्तुतत्त्वं विचिन्त्य ॥ ३२ ॥

அத்யந்தார்தி வ்யதிதமகதிம்
தேவ மாமுத்தரேதி
க்ஷுண்ணோ மார்க்கஸ்தவ சிவ
புரா கேன வா நாதநாத ।
காமாலம்பே பத தததிகாம்
ப்ரார்த்தனா ரீதிமன்யாம்
த்ராயஸ்வைநம் ஸபதி க்ருபயா
வஸ்துதத்வம் விசிந்த்ய ॥ 32 ॥

(ப - ரை) வேண்டுகோளுக்கு இம்முறையே வழக்கமுள்ளது எனக் கூறுகிறார். अनाथनाथ - அனாதைகளுக்கு ரக்ஷகனே! देव - ஸ்வாமீ अत्यन्तार्तिव्यथितं - தீவிரமான துக்கங்களால் மனம் நொந்து போன अगतिं - வேறு ரக்ஷகனில்லாத मां - என்னை उद्धर - கரையேற்று इति - என்று तव मार्गः உன்னிடம் அடைக்கலம் புகும் வழி पुरा - புராதனமாய் केन वा क्षुण्णः யாரால்தான் பழக்கத்திற்குக் கொண்டுவரப்பட்டதோ ஆச்சரியம்.

**तदधिकां** அதைவிட மேலான **कां अन्यां** - வேறு எந்தவிதமான **प्रार्थनारीतिं** - பிரார்த்தனை செய்து கொள்ளும் வழியை **आलम्बे** - நான் அநுசரிப்பேன். **बत** ஐய்யோ! **वस्तुतत्त्वं विचिन्त्य** - இந்தமாதிரி நிலையை முன்யோசனை பண்ணி **एनं** - இந்த என்னை **सपदि** - உடனே **कृपया** - கருணையினால் **त्रायस्व** - காப்பாற்று.

(க - ரை) ஹே ஈச்வர! நான் கணக்கிட முடியாத கிலேசங்களால் பீடிக்கப்பட்டிருக்கிறேன். எனக்கு உன்னைத் தவிர வேறு யாரும் கதியில்லை. என்னை இந்த துக்கஸாரத்திலிருந்து கரையேற்றிவிடு என்றவாறு உன்னிடம் பிரார்த்தனை செய்து கொள்ளும் ரீதியானது எந்தப் புண்ணியவானால் தொடங்கப்பட்டதோ! அதுவே அநாதிகாலமாய் அநாதைகளுக்கு பிரார்த்தனா ரீதியாக வழங்கி வருகிறது. ஆதலால் நானும் அவ்வழியையே பின்பற்றி எனது துக்கங்களை உன்னிடம் தெரிவித்துக்கொண்டு உன்னை ரக்ஷகன் என்று சரணமடைகிறேன். இப்புராதன ரீதியைவிட்டு வேறு புதிதாய் உன்னிடம் பிரார்த்தனை செய்து கொள்ளும் ரீதியை நான் எவ்விதம் அநுஷ்டிக்க முடியும்? இந்த நிலையை யுணர்ந்து என்னை நீ உடனே தயவுடன் காப்பாற்ற முன்வரவேண்டும் ஈச்வர! 'நான்' அநாதை, பாபீ, துக்கிதன், எனக்கு உன்னைத் தவிர வேறு கதி கிடையாது, நீ தான் என்னை ரக்ஷிக்க வேண்டும்.' என்றுதான் பக்தர்கள் உன்னை வேண்டிக் கொள்ளுவது வழக்கம். அப்படியேதான் நானும் உன்னை வேண்டிக்கொள்ளுகிறேன். ஒரு ஜீவன் ஈசனிடம் தன் பரிதாபத்தையும் பிரார்த்தனையையும் தெரிவித்துக்கொள்ள வேறு வழி கிடையாது.

அநாதிகாலமாய் சரணமடைந்த பக்தர்களை ரக்ஷித்து நீ என்னையும் ரக்ஷிப்பாயாக.

(வி - ரை) कोटयो ब्रह्महत्यानाम् अगम्यागमकोटयः। सद्यः प्रलयमायान्ति महादेवेति कीर्तनात्॥ महादेवेति वक्तारं दृष्ट्वा तु यमकिङ्कराः। पलायन्ते महाभीता स्मृत्वाः तु यमशासनम्॥ என்பது சிவரஹஸ்யம். ஜீவ ஈச்வரரூபமான வஸ்து தத்துவத்தை விசாரித்து அறிந்த மாத்திரத்தில் சோக நிவ்ருத்தி என்பது உபநிஷத்துக்களின் ஸாரம்.

## —※जीवेश्वरवस्तुतत्त्वनिरूपणं, आत्मनो मर्कटत्वनिरूपणं च※—

एतावन्तं भ्रमणनिचयं प्रापितोऽयं वराकः
श्रान्तः स्वामिन्नगतिरधुना मोचनीयस्त्वयाहम्।
कृपाकृत्यव्यपगतमतिर्दीनशाखामृगोऽयं
संताड्यैनं दशनविवृतिं पश्यतस्ते फलं किम्॥ ३३॥

ஏதாவந்தம் ப்ரமண நிசயம்
ப்ராபிதோயம் வராக:
ச்ராந்தஸ் ஸ்வாமின்ன கதிரதுனா
மோசநீயஸ்த்வயாஹம்।
க்ருத்யாக்ருத்யவ்யபகத மதிர்
தீனசாகாம்ருகோயம்
ஸந்தாட்யைநம் தசன விவ்ருதிம்
பச்யதஸ்தே பலம் கிம் ॥ 33 ॥

(ப - ரை) ஜீவன் ஈச்வரன் என்ற வஸ்து தத்துவத்தை நிரூபணம் செய்து தன்னை குரங்கு போலுள்ளவன் என்றும் கூறுகிறார். स्वामिन् - ஸ்வாமி! एतावन्तं - இந்த மட்டும் भ्रमणनिचयं - அதிக அலைச்சலை प्रापितः-

அடைவிக்கப்பட்ட **अयं वराकः** இந்த அற்ப பிராணீ **श्रान्तः**—சிரமமடைந்து சோர்ந்து போய்விட்டது. **अधुना**—இப்பொழுது **अगतिः**-நிர்கதியாய் நிற்கும் **अहं**-நான் **त्वया**-உன்னுல் **मोचनीयः** விடுவிக்கத் தகுந்தவன். **कृत्याकृत्यव्यपगतमतिः**-செய்யத்தகுந்தது தகாதது என்ற பகுத்தறிவு இல்லாத **अयं दीनशाखामृगः**-இது ஒரு எளிய குரங்கு. **एनं**-இதை **सन्ताड्य**-அடித்து **दशन-विवृतिं**-இதன் பல் இளிப்பை **पश्यतः**-பார்க்கின்ற **ते**-உனக்கு **किं फलं**-யாது பயன்?

(க-ரை) ஒரு குரங்காட்டி தன்னுல் பழக்கப்பட்ட குரங்கை வீடுதோறும் கொண்டுபோய் ஆங்காங்கு அதைப் பற்பல விதமாய் ஆட்டிவைக்கிருன். அவ்விதம் அலேந்து திரிந்து கிலேசப்பட்ட அக்குரங்கு தன் களேப்பின் மிகுதியைப் பொறுக்க மாட்டாமல் மிகவும் பரிதாபமாகப் பல்லேயிளிக்கிறது. அவ்விதம் இளிப்பது இனி என்னே விட்டுவிடமாட்டாயா? என்பது போல் தோன்றுகிறது. சஞ்சல ஸ்வபாவமுள்ளவனுதலாலும் அறிவீனனுதலாலும் ஜீவன் அக்குரங்கிற்குச் சமானமாகிருன்.

இவன் கோடிக்கணக்கான கர்ப்பவாஸத்தை அடைகிருன். காலனின் தண்டத்தாலடிக்கப்பட்டுப் பல்லே இளிக்கிருன். ஜன்மந்தோறும் தனது நன்மையை அறிந்து கொள்ளாமல் பலவிதமான சேஷ்டைகளேச் செய்து இடைவிடாது கிலேசங்களே அனுபவிக்கிருன். இப்படி இந்தக் குரங்கை ஆட்டிவைப்பதில் ஈசனுக்கு யாது பயன்? குரங்காட்டி போல அவர் பிச்சை எடுத்து ஜீவனம் செய்பவரா? அல்லது குறும்புள்ள பையனேப் போல குரங்கைத் துன்புறுத்தி

வேடிக்கை பார்ப்பவரா? இந்தக் குரங்கு படும் அவஸ்தையையும் அது மிகப் பரிதாபமாய்ப் பல்லிளிப்பதையும் பார்த்து தயவு ஏற்பட்டு ஸர்வேச்வரன் இதை அவிழ்த்து விடக்கூடாதா?

(வி - ரை) भोगार्थं सृष्टिरित्येके क्रीडार्थमिति चापरे । देवस्यैष स्वभावोऽयमाप्तकामस्य का स्पृहा ॥ என்பது சுருதி. சங்கரபகவத் பாதாசாரியார் சிவானந்த லஹரியில் மனத்தைக் குரங்காக வர்ணித்து கபாலமெடுத்து பிக்ஷைவாங்கும் உனக்கு ஸாதனமாக எனது மனத்தை உன் வசப்படுத்திக் கொள் என்று கூறுவதும் ஈண்டு கவனிக்கத்தக்கது.

## —* ईशकृपाप्राप्तिभाग्याभावहेतुप्रश्नः *—

माता तातः सुत इति समाबध्य मां मोहपाशै-
रापात्यैवं भवजलनिधौ हा किमीश त्वयाऽऽप्तम् ।
एतावन्तं समयमियतीमार्तिमापादितेऽस्मिन्
कल्याणी ते किमिति न कृपा कापि मे भाग्यरेखा ॥३४॥

மாதா தாதஸ் ஸுத இதி
ஸமாபத்ய மாம் மோஹபாசை:
ஆபாத்யைவம் பவஜலநிதௌ
ஹா கிமீச த்வயாப்தம் ।
ஏதாவந்தம் ஸமயமியதீ
மார்த்தி மாபாதிதே ஸ்மின்
கல்யாணீ தே கிமிதி ந க்ருபா
காபி மே பாக்யரேகா ॥ 34 ॥

(ப-ரை) ஈசனுடைய கிருபையை அடையக்கூடிய பாக்யம் ஏன் இல்லை என வினவுகிறார்.

ईशे - ஹே ஈச்வர माता तातः सुतः इति - தாய் தந்தை பிள்ளை என்றவாறு मोहपाशैः-ஆசைக் கயிறுகளால் मां- என்னை समाबध्य - கட்டி भवजलनिधौ - ஸம்ஸாரக்கடலில் आपात्य - தள்ளி हा - ஐய்யோ त्वया - உன்னால் किं-आप्तं - என்ன பயன் அடையப்பட்டது? एतावन्तं समयं - இவ்வளவு காலமாக इयतीं आर्तिं - இத்துணைக் கஷ்டத்தை आपादिते - அடைவிக்கப்பட்ட अस्मिन् - இந்த என் விஷயத்தில் कल्याणी - க்ஷேமத்தைச் செய்யக் கூடிய ते कृपा- உனது கருணை किमिति न - ஏன் ஏற்படவில்லை? मे - எனக்கு कापि भाग्यरेखा - கொஞ்சமாவது புண்ணியம் (ஏன் ஏற்படவில்லை)

(க-ரை) ஹே ஈச்வர! தாய் தகப்பன் பிள்ளை பெண்டிர் என்றவாறு பற்பல பந்தங்களால் என்னைப் பிணைத்து இந்த ஸம்ஸார மென்ற ஸமுத்திரத்தில் இப்படித் தள்ளியிருக்கிறாயே! இதனால் உனக்கு என்ன லாபம்? என்னை இத்தனை நாள் கஷ்டப்படுத்தியது போதாதா? இனியாவது எனக்கு நல்ல காலம் பிறந்து உனக்கு என்னிடம் தயவு உண்டாகாதா? உனது க்ருபை எனது பாக்யம்,

(வி-ரை) पुण्यैर्देवत्वमाप्नोति पापैः स्थावरतामियात् । समाभ्यां पुण्यपापाभ्यां मानुष्यं प्राप्नुयान्नरः॥ என்பது புராண வசனம். यदि मे पुण्यमस्तीह कुतो नायाति ते कृपा ? பாகவதத்திலும் आत्मजायासुतागारसुतद्रविणबन्धुषु । निरूढमूलहृदयः आत्मानं बहु मन्यते ॥ ध्रुवाणि मन्यते मोहात् गृहक्षेत्रवसूनि च । முதலியன புத்திராதிகள் பந்தமென்பதை வலியுறுத்துகின்றன.

## —※ जीवेश्वरदायविभागविवादः ※—

भुङ्क्षे गुप्तं बत सुखनिधिं तात साधारणं त्वं
भिक्षावृत्तिं परमभिनयन्मायया मां विभज्य ।
मर्यादायाः सकलजगतां नायकः स्थापकस्त्वं
युक्तं किं तद्वद विभजनं योजयस्वात्मना माम् ॥३५॥

புங்க்ஷே குப்தம் பத ஸுகநிதிம்
தாத ஸாதாரணம் த்வம்
பிக்ஷாவ்ருத்திம் பரமபிநயன்
மாயயா மாம் விபஜ்ய ।
மர்யாதாயாஸ் ஸகல ஜகதாம்
நாயகஸ் ஸ்தாபகஸ்த்வம்
யுக்தம் கிம் தத் வத விபஜனம்
யோஜயஸ்வாத்மனா மாம் ॥ 35 ॥

(ப-ரை) ஜீவ ஈச்வரர்களாகிய நமக்கு ஆனந்தமென்னும் சொத்தை பங்கிடுவதில் விவாதம் ஏற்பட்டுள்ளது எனக் கூறுகிறார்.

**तात** - அப்பா! **साधारणं** - நம் மிருவருக்கும் பொதுவாயுள்ளதாயினும் **गुप्तं** - மறைத்து (ஒளித்து) வைக்கப்பட்டதான **सुखनिधिं** - ஸுகமென்ற பொக்கிஷத்தை **भिक्षावृत्तिं परम् अभिनयन्** - பிக்ஷை எடுத்து ஜீவிப்பதாக மிகவும் பாசாங்குசெய்து கொண்டு **त्वं** - நீ - **मां मायया विभज्य** - என்னை வஞ்சனையாகப் பிரித்து வைத்துவிட்டு (மாயை - அஜ்ஞானம். அஜ்ஞானத்தால் என்னை வேறுபடுத்தி விட்டு) **भुङ्क्षे** - நீயே அனுபவிக்கிறாய். **सकलजगतां नायकः** - எல்லாவுலகங்களையும் நடத்திவைப்பவனும் **मर्यादायाः स्थापकः** - கட்டுப்பாடு

களை ஏற்படுத்தியவனுமாக இருப்பவன் त्वं - நீ — तत् - ஆதலால் (அம்மாதிரியான) विभजनं - பிரிவினை किं युक्तं பொருந்துமா? वद - சொல் मां - என்னை आत्मना - தன்னோடு योजयस्व - சேர்த்துக்கொள்.

(க—ரை) பரமாத்மாவின் நித்ய ஸுக நிலையில் ஜீவாத்மாவுக்கும் ஸமமான பாத்யமிருக்க, மாயையினால் ஜீவாத்மா அந்த ஸுகாநுபவத்திலிருந்து விலக்கப்பட்டு பல கிலேசங்களை அநுபவிக்கின்றான் என்ற வேதாந்த தத்துவத்தை ஒரு லௌகிக உதாஹரணத்தை உட்கருத்தாக வைத்துப் பேசுகிறார். தகப்பனாயிருக்கும் நீ உனக்கும் எனக்கும் பொதுவான ஆத்ம சுகம் என்ற ஐச்வரியத்தை எனக்கு ஆளக்கொடுக்காமல் என்னை வஞ்சனையாக பாகம் செய்து விலக்கிவிட்டு நீயும் ஏதோ பிச்சை எடுத்து ஜீவிப்பவன் போல பாசாங்கு செய்துகொண்டு தனிமையில் அந்த ஐச்வரியத்தை நீயே அநுபவிக்கிறாயே! இது எப்படி நியாயமாகும்? உலகத்தவர்களுக்கு நியதிகளை விளக்கும் வேதங்களையும் தர்மசாஸ்திரங்களையும் ஏற்படுத்திய நீயே இவ்விதம் அக்கிரமம் செய்தால் யாரிடம் முறையிடுவது? உனக்கு மேல் அதிகாரி யிருந்தாலும் அவரிடம் முறையிடலாம். நீயே யாவர்க்கும் மேலான பிரபுவாதலால் எனக்கு உன்னைத் தவிர முறையிடுவதற்கு வேறு புகலிடமும் கிடையாது. மாயை என்பது அவித்யை. அதுதான் ஜீவாத்மா பரமாத்மாவினின்று விலகி யிருப்பதற்குக் காரணம். தாருகாவனத்தில் மஹர்ஷிகளுக்கு ஜ்ஞாநோபதேசம் செய்யும் பொருட்டு லீலையாக பகவான் பிக்ஷை எடுத்தார் என்பது புராண ப்ரஸித்தம்.

(வி - ரை) பகவானே உலகத்தில் நியதிகளை ஏற்படுத்தியவர் என்பதை एष सेतुर्विधरण एषां लोकानां असंभेदाय என்ற உபநிஷத் வாக்யம் கூறுகிறது.

अस्य महतो भूतस्य निःश्वसितमेतदृग्वेदो यजुर्वेदः सामवेदः என்ற உபநிஷத்தும் शास्त्रयोनित्वात् என்பது முதலிய ப்ரஹ்ம ஸூத்திரமும், यस्य निःश्वसितं वेदा यो वेदेभ्योऽखिलं जगत्-என்ற வேத பாஷ்யகார வசனமும் ஈசனே ஸகல ஜகத்தின் நியதிகளை நிலை நிறுத்த வேதாதிகளை ஏற்படுத்தியவர் என்பதைத் தெளிவுறச்செய்யும். அவனே ஸகல ஜகந்நாயகன் என்பதை तमीश्वराणां परमं च दैवतम् என்பது முதலிய பாரத வாக்யங்கள் வெளிப்படுத்துவன.

## —* भक्तपादधूलिभिः आसनः शरीरारम्भप्रार्थना *—

न त्वा जन्मप्रलयजलधेरुद्धरामीति चेद्धीः
आस्तां तन्मे भवतु च जनिर्यत्र कुत्रापि जातौ ।
त्वद्भक्तानामनितरसुखैः पादधूलीकिशोरैः
आरब्धं मे भवतु भगवन् भावि सर्वं शरीरम् ॥ ३६ ॥

நத்வா ஜன்மப்ரலய ஜலதே
ருத்தராமீதி சேத்தீ:
ஆஸ்தாம் தன்மே பவது ச
ஜனிர்யத்ர குத்ராபி ஜாதௌ ।
த்வத்பக்தானாமனிதரஸுகை:
பாததூளீ கிசோரை:
ஆரப்தம் மே பவது பகவன்
பாவி ஸர்வம் சரீரம் ‖ 36 ‖

(ப-ரை) எனது அடியவர்களின் பாத தூளியி ஞல் எனது உடல் உண்டாகட்டும் என வேண்டு கிருர்.

त्वा - உன்னை जन्मप्रलयजलधेः - பிறவித் தொடர் பென்ற துக்கத்தினின்றும் न उद्धरामि - கரையேற்ற மாட்டேன் इति - என்று चेत् - உனது கருத்தாஞல் मे - எனக்கு तत् आस्तां - அப்பிறவி இருக்கட்டும். जनिः च - பிறவியும் यत्र कुत्रापि जातौ - எந்த ஜாதியில் வேண்டு மாஞலும் भवतु - ஏற்படட்டும் भगवन् - ஓ ஸ்வாமி मे भावि सर्वं शरीरं - எனக்கு ஏற்படப்போகிற எல்லா சரீர மும் त्वद्भक्तानां - உன் பக்தர்களுடைய अनितरसुखैः - உன்னிடத்திலன்றி வேறு எங்கும் ஸுகத்தை யறி யாத पादधूलीकिशोरैः - கால் தூசித் திவிலைகளால் आराब्धं भवतु - உண்டாக்கப்பட்டதாய் இருக்கட்டும்.

(க-ரை) எவ்விதத்திலும் உன்னை ஜனன மர ணங்களிலிருந்து விடுவிக்க முடியாது என்று உனது தீர்மானமாகில் எனக்கு அளிக்கப்படும் சரீரமானது எந்த ஜாதியில் என்னைப் பிறக்கச் செய்வதாஞலும் சரி உன் பக்தர்களின் கால் பட்ட தூளிகளால் அமைக் கப் பெற்றதாயிருக்கட்டும் என்றுதான் பிரார்த்தித் துக் கொள்ளுகிறேன். ஏனெனில் அப்பொழுது எனக்கு உன்னிடம் இடைவிடாத சஞ்சலமற்ற பக்தி ஏற்பட ஹேதுவாகும். பெரியோர்களின் பாத தூளி சரீராரம்பத்திற்கு எப்படிக் காரணமாகும் என்ருல் மாதாபிதாக்கள் உட்கொண்ட அன்ன பாஞதிகளில் அவை சம்பந்தப்பட்டிருப்பதன் மூலம் என்று கூற லாம். அல்லது आरब्ध - என்பதற்குப் பதிலாய் आलिप्तं - என்ற பாடத்தை எடுத்துக்கொண்டால் பால்யம்

முதல் ஸாதுக்களின் பாத தூளி சரீரத்தில் படுவது அநேக ஸந்தர்ப்பங்களில் ஸுலபமாகும்.

(வி - ரை) समस्तसंपत्समवाप्तिहेतवः समुत्थितापत्कुलधूमकेतवः । अपारसंसारसमुद्रसेतवः पुनन्तु मां ब्राह्मणपादपांसवः ॥ என்று பிராமணர்களின் பாத தூளியின் மகிமை சொல்லப்பட்டிருக்கிறது. तदन्तरप्रतिपत्तौ रंहति संपरिष्वक्तः प्रश्ननिरूपणाभ्यां - என்ற ப்ரஹ்ம ஸூத்ரத்தின் பாஷ்யத்திலும், சாந்தோக்யம் பஞ்சாக்னி வித்யை கூறுமிடத்திலும் ஜீவனுடைய வேறு சரீர ப்ரவேசம் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

## —* कीटादिजन्मप्राप्तावपि ईश्वरचरणान्तिकस्थितिप्रार्थना *—

कीटा नागास्तरव इति वा किं न सन्ति स्थलेषु
त्वत्पादाम्भोरुहपरिमलोद्वाहिमन्दानिलेषु ।
तेष्वेकं वा सृज पुनरिमं नाथ दीनार्तिहारिन्
आतोषान्मां मृड भवमहाङ्गारनद्यां लुठन्तम् ॥ ३७ ॥

கீடா நாகாஸ்தரவ இதி வா
கிம் நஸந்தி ஸ்தலேஷு
த்வத் பாதாம் போருஹ
பரிமளோத்வாஹி மந்தானிலேஷு |
தேஷ்வேகம் வா ஸ்ருஜ புனரிமம்
நாத தீனார்த்தி ஹாரின்
ஆதோஷான் மாம் ம்ருட
பவமஹாங்கார நத்யாம் லுடந்தம் || 37

(ப - ரை) புழு முதலிய பிறவி எடுப்பினும் உனது திருவடியருகில் இருத்தல் வேண்டுமென்கிறார்.

कीटाः - புழுக்கள் नागाः - பாம்புகள் तरवः - மரங்கள் इति - என்றவாறு त्वत्पादाम्भोरुहपरिमलोद्वाहिमन्दानिलेषु - உன் திருவடியாகிற தாமரைப் பூவின் நறு மணத்தைப் பரப்பும் தென்றல் வீசுகிறன்ற स्थलेषु - பிரதேசங்களில் किं वा न सन्ति - இருக்கவில்லையா? दीनार्तिहारिन् मृड - பரிதவித்தவர்களின் கிலேசங்களைப் போக்கி சுகமளிக்கும் नाथ - பிரபுவே भवमहाङ्गारनद्यां लुठन्तं - ஸம்ஸாரமாகிற பெரிய நெருப்பு நதியில் உருண்டு வரும் इमं मां - இந்த ஜீவனுகிய என்னை (ते - உனக்கு) आ तोषात् - திருப்தி ஏற்படும் வரையில் तेषु वा - அவைகளிலாவது एकं सृज - ஒன்ருகப் படைப்பாயாக.

(க - ரை) மனுஷ்ய ஜன்மம் தான் வேண்டுமென்று நான் கேழ்க்கவில்லை. புழு பூச்சி பாம்பு மரம் என்றவாறு எவ்வளவோ ஜீவராசிகள் இருக்கின்றனவே! அவற்றில் ஒன்ருய் என்னைச் சிருஷ்டித்தாலும் சம்மதமே. ஆனல் அப்பிரதேசத்தில் நான் சஞ்சரிக்குமிடம் உன் பாதத்தில் பட்ட இளங்காற்று வீசுமிடமாக இருந்தால் போதும். இந்த ஜனன மரணமென்னும் நெருப்பு நதியில் கிடந்து புரளும் எனக்கு உன் சரணகமலத்தின் மணங்கமழும் ஜில்லென்ற மந்த மாருதம் ஆறுதலையளிக்கட்டும். அவ்விதம் நீ கிருபை செய்வாயானல் எவ்வளவு காலம் இந்த ஸம்ஸாரத்தில் என்னைத் தள்ளிக்கொண்டிருந்தாலும் எனக்கு ஆக்ஷேபணை இல்லை. கிலேசப்படுபவர்களின் கிலேசங்களை நீக்கும் கருணாநிதியான நீ இந்த வரம் கொடுக்க மறுப்பாயா?

(வி - ரை) சிவாநந்தலஹரியிலும் नरत्वं देवत्वं नगवनमृगत्वं मशकता पशुत्वं कीटत्वं भवतु विहगत्वादि-जननम् । सदा त्वत्पादाब्जस्मरणपरमानन्दलहरीविहारासक्तं चेत् हृदयमिह किं तेन वपुषा ॥ என்று கூறப்பட்டுள்ளது.

—※ आत्मनः चरमसमयेऽपीश्वरस्मृतिप्रार्थना ※—

काले कण्ठस्फुरदसुकलालेशसत्तावलोक-
व्याग्रोदग्रव्यसनरुदितस्निग्धरुद्धोपकण्ठे ।
अन्तस्तोदैरवधिरहितामार्तिमापाद्यमानेऽ-
प्यङ्घ्रिद्वन्द्वे तव निविशतामन्तरात्मन्ममात्मा ॥ ३८ ॥

காலே கண்டஸ்புரதஸுகலா
வேச ஸத்தாவலோக
வ்யக்ரோதக்ரவ்யஸந ருதித
ஸ்னிக்த ருத்தோபகண்டே ।
அந்தஸ்தோதை ரவதி ரஹிதா
மார்த்தி மாபாத்யமானேபி
அங்க்ரி த்வந்த்வே தவ நிவிசதாம்
அந்தராத்மன் மமாத்மா ॥ 38

(ப - ரை) இறுதிக்காலத்திலாவது உனது ஸ்மரணம் எனக்கு இருத்தல் வேண்டுமென்று கூறுகிறார். कण्ठस्फुरदसुकलालेशसत्तावलोकव्यग्रोदग्रव्यसनरुदितस्निग्धरुद्धोपकण्ठे - நெஞ்சில் துடிக்கும் மெல்லிய பிராண வாயுவின் ஸூக்ஷ்மமான நடமாட்டத்தை பரீக்ஷித்தறிய அரும்பாடுபடும் ஸகல பந்து மித்திரர்களால் அருகாமையில் சூழப்பட்டும் अवधिरहितैः - எல்லையற்ற अन्तस्तोदैः - சுவாஸம் கபம் விக்கல் முதலிய ஆந்தர

மான துன்பங்களால் आर्तिम् आपाद्यमाने - வேதனை அடைவிக்கப்படும் कालेऽपि - அந்த ஸமயத்திலாவது अन्तरात्मन् - அந்தர்யாமியாக வுள்ள பரமாத்மாவே मम आत्मा - என் ஜீவன் तव - உன்னுடைய अङ्घ्रिद्वन्द्वे - இரு பாதங்களில் निविशतां - ஈடுபடவேண்டும்.

(க - ரை) அந்தியகாலத்தில் வைத்யர்கள் கை விட்டபிறகு பந்துக்களும் நண்பர்களும் கிரமமாக க்ஷீணித்துவரும் சுவாஸத்தை பரீக்ஷித்துக் கொண்டு பக்கத்தில் நெருக்கமாய்க் கூடிக்கொண்டு துக்கம் மிகுந்து ஓலமிடும் அந்த சமயத்தில், உயிர் வெளிச் செல்லுவதால் உண்டாகும் வேதனை, சரீரத்தினுள் பலவாறு பெருகி பொறுக்க முடியாதபடி துன்புறுத் தவும் கூடும். அந்தக்காலத்தில் கூட எனது அந்தக் கரணம் உனது திருவடிகளில் லயமடையவேண்டும்.

(வி - ரை) एष त आत्मा अन्तर्याम्यमृतः - என்கிற உபநிஷத் பரப்ரஹ்மமே ஜீவனின் வாஸ்தவமான ஸ்வரூபம் என்பது புலப்படும்.

## —* एतत्प्रार्थनादृढीकरणम् *—

अन्तर्बाष्पाकुलितनयनानन्तरङ्गानपश्यन्
अग्रे घोषं रुदितबहुलं कातराणमशृण्वन् ।
अत्युत्क्रान्तिश्रममगणयन्नन्तकाले कपर्दिन्
अङ्घ्रिद्वन्द्वे तव निविशतामन्तरात्मन्ममात्मा ॥ ३९ ॥

அந்தர் பாஷ்பாகுலித
நயனனந்த ரங்காநபச்யன்
அக்ரே கோஷம் ருதித பஹுளம்
காதராணமச்ருண்வன் ।

**அத்யுத் க்ராந்தி ச்ரமமகணயன்**
**அந்தகாலே கபர்தின்**
**அங்க்ரி த்வந்த்வே தவ நிவிசதா**
**மந்தராத்மன் மமாத்மா ‖ 39**

(ப - ரை) அதே வேண்டுகோளை மேலும் வலி யுறுத்துகிறார்.

**कपर्दिन्** - ஜடாதாரியான பரமேச்வரனே! **अन्तरात्मन्** – அந்தர்யாமியே! **अन्तकाले** - ப்ராண வியோக காலத்தில் **अन्तर्बाष्पाकुलितनयनान्** – உள்ளூரப் பெருகிய கண்ணீரால் கலங்கிய கண்ணுடைய **अन्तरङ्गान्** - ஆப்த ஜனங்களை **अपश्यन्** - பார்க்காமலும் **अग्र** - முன்னால **कातराणां** - பயந்த ஸ்திரீகளின் **रुदितबहुलं** - அழுகை மேலிட்ட **घोषं** - பெருங்குரலையும் (காதில் வாங்காம லும்) **उत्क्रान्तिश्रममपि** - மரண வேதனையையும் **अगणयन्** - பொருட்படுத்தாமலும் **तव** - உன்னுடைய **अङ्घ्रिद्वन्द्वे** - இருபாதங்களில் **मम** - என்னுடைய **आत्मा** – ஜீவன் **निविशतां** - அடைக்கலம் புகவேண்டும்.

(க – ரை) தாங்கமுடியாத துக்கத்தினுல் பக்கத் தில் கண் கலங்கி நிற்கும் உயிருக்கு உயிரான என் சொந்த ஜனங்களைக் கண்ணுல் பார்க்காமலும், மரிப்ப வனைக்கண்டு பயத்துடனும் சோகத்துடனும் ப்ரலா பம் செய்பவர்களின் கூக்குரல்களைக் காதில் வாங்கிக் கொள்ளாமலும் ப்ராணன் வெளிக்கிளம்பும் போது ஏற்படும் சரீராவஸ்தைகளை லக்ஷ்யம் செய்யாமலும் அந்திய காலத்தில் என் மனம் அந்தராத்மாவான உன்னிடம் ஐக்யமடையட்டும்.

(வி – ரை) இந்திரியம் முதலியன நல்ல நிலையில் இருக்கும் பொழுது, ஐயம் திரிபு இல்லாமல் ஸ்வாநு

பவ விஷயமாக ஆன சிவோஹம் என்ற பாவனை, அந்திய காலத்திலும் தொடர்ந்து இருக்கும். இஃது, வித்யாரண்ய முனிவரால் दिने दिने स्वप्नसुप्त्योः अधीते विस्मृतेऽप्ययम्। परोद्युर्नानधीतः स्यात्तद्वद्विद्या न नश्यति॥ प्रमाणोत्पादिता विद्या प्रमाणं प्रबलं विना। न नश्यति न वेदान्तात् प्रबलं मानमिष्यते। என்று விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

## —※ ईश्वरप्रत्यक्षानुभवः ※—

चारुस्मेराननसरसिजं चन्द्ररेखावतंसं
फुल्लन्मल्लीकुसुमकलिकादामसौभाग्यचोरम्।
अन्तः पश्याम्यचलसुतया रत्नपीठे निषण्णं
लोकातीतं सततशुभदं रूपमप्राकृतं ते॥ ४०॥

சாருஸ்மேராநநஸரஸிஜம்
சந்த்ரரேகாவதம்ஸம்
புல்லன்மல்லீ குஸுமகலிகா
தாம ஸௌபாக்யசோரம்।
அந்தः பச்யாம்யசல ஸுதயா
ரத்னபீடே நிஷண்ணம்
லோகாதீதம் ஸததசுபதம்
ரூபமப்ராக்ருதம் தே ‖ 40

(ப - ரை) ஈச்வராநுபவத்தை வேண்டுகிறார்:

चारुस्मेराननसरसिजं - அழகிய புன்னகை கொண்ட வதனத் தாமரையை யுடையவரும் चन्द्ररेखावतंसं - இளம் பிறையைச் சிரஸில் சூட்டியவரும் फुल्लन्मल्लीकुसुमकलिकादामसौभाग्यचोरम् - மலர்ந்த மல்லிகை மொக்குகளால் தொடுத்த மாலையின் மங்களகரமான எழி

லைப் பரிப்பதும் **अचलसुतया** - மலை மன்னனின் மகளொடு **रत्नपीठे** - ரத்னமய பீடத்தில் **निषण्णं** - வீற்றிருப்பதும் **लोकातीतं** - லோகங்களுக்கு எட்டாததும் **सततशुभदं** - நித்ய மங்களங்களைக் கொடுப்பதும் **अप्राकृतं** - ஸாதாரணமல்லாததும் ஆகிய **ते रूपं** - உன் ஸ்வரூபத்தை **अन्तः पश्यामि** - உள்ளத்தில் காண்கிறேன்.

(க - ரை) மனதின் தியான ஸமாதியில் உதிக்கும் ஈச்வரஸ்வரூப ஸாக்ஷாத்காரத்தை சித்திரத்தில் வரைவது போல வர்ணித்துக் கூறுகிறார். ஈச்வரனின் சரீர காந்தியை மலரும் தருவாயிலிருக்கும் மல்லிகை மொட்டுகளின் மாலைக்கு ஒப்பிடுகிறார். அதில் வெண்மை, மணம், மென்மை, குளிர்ச்சி இவை யெல்லாம் தோன்றுகின்றன. பகவான் பார்வதீ தேவியுடன் யோகாஸனத்தில் வீற்றிருக்கும் வைபவம் தோன்றுகிறது. கருணைமூர்த்தியின் வதனத்தில் மந்தஹாஸம் தவழுகிறது. முடியில் இளம்பிறை ஒளி வீசுகிறது. அந்த ஸ்வரூபம் எங்கும் காணக்கிடைக்காத திவ்யமங்களமானது. 224 லோகங்களுக்கு அப்பாலிருந்து பிரகாசிப்பது. அத்தகைய உன் ரூபம் எனக்கு இப்பொழுது தென்படுகிறது. அடுத்த சுலோகத்துடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது **अन्तः पश्यामि** - என்ற வாக்யத்திற்கு நான் காண்பேனா? என் அந்திய காலத்தில் உன் திருவுருவத்தை நான் காண்பது ஸாத்யமாகுமா? என்று அர்த்தம் செய்து கொள்வதே உசிதம் எனத் தோன்றுகிறது.

(வி - ரை) **शुभद सततं** - என்று பாடம் சில பிரதிகளில் உள்ளது. நிஷ்களரூபமும் **तथैव योगिनां ध्यानिनां मन्त्रिणामपि । जपपूजानिमित्ताय निष्कलं सकलं भवेत् ॥**

என்ற ஆகம வாக்கியத்தின்படி ஸகளமாகத்தோன்றும் या ते रुद्रा शिवा तनूरघोरा என்ற சுருதியில் अपापकाशिनी என்பது ஸகளரூபம் என்று கூறுகின்றனர்.

## —※ प्रार्थनादौर्लभ्यान्निर्वेदः ※—

स्वप्ने वापि स्वरसविकसद्दिव्यपङ्केरुहाभं
पश्येयं किं तव पशुपते पादयुग्मं कदाचित् ।
क्वाहं पापः क्व तव चरणालोकभाग्यं तथापि
प्रत्याशां मे घटयति पुनर्विश्रुता तेऽनुकम्पा ॥ ४१ ॥

ஸ்வப்னே வாபி ஸ்வரஸ விகஸத்
திவ்ய பங்கேருஹாபம்
பச்யேயம் கிம் தவ பசுபதே
பாதயுக்மம் கதாசித் |
க்வாஹம் பாப: க்வ தவ
சரணாலோக பாக்யம் ததாபி
ப்ரத்யாசாம் மே கடயதி
புனர்விச்ருதா தேனுகம்பா ‖ 41

(ப-ரை) அந்திய காலத்தில் அந்த பாக்யம் கிடைப்பது அரிது எனினும் ஸொப்பனத்திலாவது உன் தரிசனம் எப்பொழுதாவது ஒரு சமயம் கிடைக்குமா? என்று வேண்டுகோள் கிடைக்கப் பெருமையால் வருந்துகிறார். पशुपते-ஹே ஈசவரா! स्वरसविकसद्दिव्य पङ्केरुहाभं-தானுக மலர்ந்த தேவலோகத்துத் தாமரைப் புஷ்பத்தின் அழகு பொருந்திய तव पादयुग्मं-உன்னிரு பாதங்களை कदाचित्-எப்பொழுதாவது स्वप्ने वापि-ஸ்வப்னத்திலாவது किं पश्येयं-நான் பார்ப்

பேணு? पापः क्व अहं - பாபியான நான் எங்கே? तव - உன்னுடைய चरणालोकभाग्यं क्व - உன் பாதங்களைக் காணும் பாக்கியம் எங்கே? तथापि - அப்படி இருப்பினும் विश्रुता - உலகப் பிரஸித்தமான ते - உன்னுடைய अनुकम्पा पुनः - தயவு மட்டும் मे - எனக்கு प्रत्याशां - நம்பிக்கையை घटयति - ஏற்படுத்துகிறது.

(க-ரை) தானாக மலரும் தாமரைப் புஷ்பத்தின் அழகு வாய்ந்த உன் பாதங்களை கனவிலாவது நான் தெய்வச் செயலாகவாவது பார்க்க நேரிடலாகாதா? அதற்குக்கூட நான் கொடுத்து வைத்தவனில்லை. ஏனெனில் நான் அவ்விதமான பாபி. ஆனாலும் உலகம் புகழும் உன் கருணையைக் கடைப்பிடித்துக் கொண்டு கனவிலாவது அந்த திவ்ய தரிசனத்தின் பாக்கியம் எனக்குக் கிடைக்கும்படி நீ அனுக்ரஹம் செய்வாய் என்று நான் நம்பி ஆவலுடனிருக்கிறேன்.

(வி-ரை) க்வ என்று இரண்டு தரம் கூறியது உன் திருவடி தரிசன பாக்கியம் கிடைப்பது மிகவும் அரிது என்பதை உணர்த்துகிறது.

—※ भिक्षाचर्यादिकापटचनिरूपणम् ※—

भिक्षावृत्तिं चर पितृवने भूतसङ्घैर्भ्रमेदं
विज्ञातं ते चरितमखिलं विप्रलिप्सोः कपालिन् ।
आवैकुण्ठद्रुहिणमखिलप्राणिनामीश्वरस्त्वं
नाथ स्वप्नेऽप्यहमिह न ते पादपद्मं त्यजामि ॥ ४२ ॥

பிக்ஷாவ்ருத்திம் சர பித்ருவனே
பூதஸங்கைர்ப்ரமேதம்
விஜ்ஞாதம் தே சரிதமகிலம்
விப்ரலிப்ஸோ: கபாலின் |
ஆவைகுண்டத்ருஹிண
மகிலப்ராணிஞ மீச்வரஸ்த்வம்
நாத ஸ்வப்னேப்யஹமிஹ நதே
பாதபத்மம் த்யஜாமி || 42

(ப - ரை) நீ பிக்ஷை எடுத்தல் முதலியன கபட மாக ஏற்பட்டன என்று கூறுகிறார். कपालिन् - கபால தாரியான சிவனே भिक्षावृत्तिं चर - பிச்சை எடுப்பதை அனுஷ்டி. पितृवने - சுடுகாட்டில் भूतसङ्घैः - பிசாசங்க ளுடன் भ्रम - சுற்று (எனினும்) अखिलं इदं - இது எல் லாம் विप्रलिप्सोः ते - ஏமாற்றும் எண்ணமுடைய உன் னுடைய चरितं - நடவடிக்கை (என்று) विज्ञातं - தெரிந்துவிட்டது. आवैकुण्ठद्रुहिणं - விஷ்ணு ப்ரஹ்மா பர்யந்தமான अखिलप्राणिनां - எல்லா ஜீவராசிகளுக்கும் ईश्वरः त्वं - ஈசன் நீ. नाथ - ஓ ஸ்வாமி स्वप्नेऽपि - கனவிற்கூட इह - இந்த ஜன்மத்தில் अहं - நான் ते पादपद्मं - உன் சரணகமலத்தை न त्यजामि - விடமாட்டேன்.

(க-ரை) நீ பிக்ஷை எடுப்பதானாலும் சுடுகாட்டில் சஞ்சரித்தாலும் பூதங்களுடன் கூடித்திரிந்தாலும் மண்டை யோட்டைப் பூண்டிருந்தாலும் உன் மகி மையை என்னிடமிருந்து மறைத்துவிட முடியாது. நீ எப்படி நடித்துக்காண்பித்தாலும் நீதான் கொசுமு முதல் பிரமன் விஷ்ணு முதலிய தேவதைகள் பரியந் தம் ஸகல பிராணிகளுக்கும் அதிபதி. இதை நான் அறிந்தவனாதலால் நினைவுள்ளபோது மட்டுமல்லாமல்

ஸ்வப்னதசையில் கூட உன் சரணகமலங்களை நான் விடவே மாட்டேன்.

(வி-ரை) यस्यानवद्यं चरितं मनीषिणो
गृणन्त्यविद्यापटलं बिभित्सवः ।
निरस्तसाम्यातिशयोऽपि यः स्वयं
पिशाचचर्यामचरत्सतां गतिः ॥

என்று பாகவதத்தில் கூறியதும் கண்டு கவனிக்கத் தக்கது.

## —※ ईश्वरस्य ऐश्वर्यं श्रुतिसिद्धम् ※—

आलेपनं भसितमावसथः श्मशानम्
अस्थीनि ते सततमाभरणानि सन्तु ।
निह्नोतुमीश निखिलश्रुतिसारसिद्धम्
ऐश्वर्यमम्बुजभवोऽपि च न क्षमस्ते ॥ ४३ ॥

ஆலேபனம் பஸிதமாவஸதச் ச்மசானம்
அஸ்தீனி தே ஸதத மாபரணநி ஸந்து ।
நின்ஹோது மீச நிகில ச்ருதி ஸாரஸித்தம்
ஐச்வர்ய மம்புஜபவோபி ச ந க்ஷமஸ்தே ॥ 43

(ப-ரை) ஈசனின் பெருமை வேதஸித்தம் எனக் கூறுகிறார். आलेपनं भसितं - நீ பூசிக்கொள்ளுவது விபூதி. आवसथः - உனதிருப்பிடம் श्मशानं - சுடுகாடு. ते - உனக்கு सततं - எப்பொழுதும் आभरणं - அணியாக இருப்பன अस्थीनि - எலும்புகள். सन्तु - இவ்வாறு இருக்கட்டும். ईश - ஈச்வரனே! सकल श्रुतिसारसिद्धं - ஸகல வேதங்களாலும் ஸாரமென்று நிச்சயமாகத்

தெரிகிற தே - உன்னுடைய ऐश्वर्यं - ஈச்வரத் தன்மையை निह्नोतुं-மறைக்க अम्बुजभवोऽपि च - ப்ரஹ்மாவும் न क्षमः- முடியாதவர்.

(க - ரை) சாம்பலைப் பூசி சுடுகாட்டில் வசித்து எலும்புமாலை பூண்டு நீ ஏழைக்கோலத்தை ப்ரகடனம் செய்தாலும் ஸகல வேதங்களாலும் உபநிஷத்துக்களாலும் தீர்மானமாய் கோஷிக்கப்படும் உன் ஐச்வர்யத்தை மறைக்கும் திறமை ப்ரஹ்ம தேவனுக்கும் கிடையாது.

(வி - ரை) சுருதி பாரஸித்தம் என்று ஒரு பாடம் உண்டு. ப்ரஹ்மதர்க்கஸ்தவத்தில் दग्धे तवाक्षिनयनेन चराचरेऽस्मिन् त्वत्तोऽखिलं भुवनमेव महाश्मशानम्। तत्र स्थितिं विबुधनाथ तवासहायां, सन्तः श्मशानवसतिं समुदाहरन्ति ॥ ஸகல ஸம்ஹார காலத்தில் ஒருவகை ஈசனிருக்கும் நிலையை மஹாச்மசானவாஸி என்ற சொல் உணர்த்துவதாகக் கூறுகிறார். சிவபுராணத்தில் எலும்புகள் விஷ்ணுவினுடையன என்பது விரிவாகக் கூறப்படுகிறது. வேதங்களைக் கவர்ந்துசென்ற ஸோமகாஸுரனைக் கொன்று மத்ஸ்யரூபத்துடன் அட்டஹாஸம் செய்த விஷ்ணுவை குஹன் சிக்ஷித்தான். அவர் தன்னுடைய நேத்ரவலய ரூபமான எலும்பைக் கொடுத்தார். செறுக்குற்ற ஆதி கூர்மம் கணேசனால் துன்புறுத்தப்பட்டு தனது முதுகு கபாலாஸ்தியைக் கொடுத்தார். வீரபத்ரனால் பீடிக்கப்பட்ட ஆதி வராஹம், தெத்துப்பல்லைக் கொடுத்தார். சரபத்தினால் ஹிம்ஸிக்கப்பட்ட ந்ருஸிம்ஹன் தனது தோலையும் ஆகாசபைரவரால் சிக்ஷிக்கப்பட்ட த்ரிவிக்ரமன் வீணாதண்டத்தையும் கொடுத்தார் என்பது சிவபுராணம்.

பிக்ஷாடனம் தாருகாவன மஹர்ஷிகளுக்கு ஜ்ஞானோபதேசம் செய்யவென்பது ப்ரஸித்தம். ச்வேதாச்வதரோபநிஷத், சங்கரஸம்ஹிதா, ஸனத்குமார ஸம்ஹிதா, சிவபுராணம் முதலியன ஈசனுக்கு உள்ள குணாதிசயங்களைக் கூறுகின்றன. ईशावास्यमिदं सर्वं, सर्वव्यापी स भगवान् तस्मात्सर्वगतः शिवः - என்பது உபநிஷத்.

## —* शिवानुचरभृत्यभावाभ्यर्थनम् *—

विहर पितृवने वा विश्वपारे पुरे वा
रजतगिरितटे वा रत्नसानुस्थले वा ।
दिश भवदुपकण्ठं देहि मे भृत्यभावं
परमशिव तव श्रीपादुकावाहकानाम् ॥ ४४ ॥

விஹர பித்ருவனே வா விச்வபாரே புரே வா
ரஜத கிரி தடே வா ரத்னஸானுஸ்தலே வா |
திச பவதுபகண்டம் தேஹி மே ப்ருத்யபாவம்
பரமசிவ தவ ஸ்ரீபாதுகாவாஹகானாம் || 44

**पितृवने वा विहर** - நீ சுடுகாட்டில் சஞ்சரித்தாலும் சரி. **विश्वपारे पुरे वा** - ஸகலபுவனங்களுக்கு அப்பாலுள்ள உன் லோகத்தில் நீ வஸித்தாலும் சரி. **रजतगिरितटे वा** - வெள்ளிமலையான கைலாஸத்திலானாலும் சரி. **रत्नसानुस्थले वा** - அல்லது ரத்ன தாழ்வரையுடன் கூடிய மேருமலையிலானாலும் சரி. **हे परमशिव** - ஏ பரமசிவனே **भवदुपकण्ठे** - உன் சமீபத்திலிருத்தலை **दिश** - எனக்கு ஏற்படுத்து. **तव** - உன்னுடைய **श्रीपादुकावाहकानां** - பாதுகைகளைத் தாங்கும் நந்தி பிருங்கி முதலியவர்களுக்கு **भृत्यभावं** - ஸேவகனாயிருத்தலை **मे देहि** - எனக்கு கொடு.

(க - ரை) நீ சுடுகாட்டில் வஸித்தாலும் சரி அல்லது 224 புவனங்களுக்கு அப்பாலுள்ள உன் லோகத்தில் வசித்தாலும் சரி. நீ கைலாஸத்திலோ மேருமலையிலோ இருந்தாலும் சரி. நீ எங்கிருப்பினும் உன் சமீபத்தில் சிச்ருஷை செய்து கொண்டிருக்கும் பக்தர்களின் அடிமையாக என்னை ஏற்படுத்து.

(வி - ரை) அடியார்க்குமடியேன் என்றது தேவாரம்.

## —* अर्थवादस्तुतामरानीश्वरत्वकथनम् *—

विविधमपि गुणौघं वेदयन्त्यर्थवादाः
परिमितविभवानां पामराणां सुराणाम् ।
तनुहिमकरमौले तावता तत्परत्वे
कति कति जगदीशाः कल्पिता नो भवेयुः ॥ ४५ ॥

விவிதமபி குணௌகம்
வேதயன்த்யர்த்தவாதா:
பரிமித விபவாநாம்
பாமராணாம் ஸுராணாம் |
தநு ஹிமகர மௌலே
தாவதா தத்பரத்வே
கதி கதி ஜகதீசா:
கல்பிதா நோ பவேயு: ‖ 45

(ப - ரை) அர்த்த வாதத்திஞல் துதிக்கப்பட்டவர்கள் ஈசனல்லர் என்கிருர். तनुहिमकरमौले - இளம்பிறையை முடியிற் சூடியவரே परिमितविभवानां - கணக்கிடப்படும் பெருமை வாய்ந்த पामराणां - அஜ்ஞானி

களான सुराणां - தேவர்கள் விஷயத்தில் अर्थवादाः - வேதங்களின் தாற்காலிகப் புகழ்ச்சிகள் विविधमपि गुणौघं பற்பலவிதமான குணவிசேஷங்களை वेदयन्तु - விளம்பரப்படுத்தட்டும். तावता - அந்தக் காரணத்தைக் கொண்டே तत्परत्वे - அந்த தேவர்களுக்கு உன்னைவிட உயர்ந்த ஸ்தானமானது கிடைத்து விடுமானால் कति कति जगदीशाः - எத்தனை எத்தனை ஜகதீசர்கள் कल्पिताः - ஏற்படுத்தப் பட்டவர்களாக नो भवेयुः - ஆகமாட்டார்கள்.

(க - ரை) பரமேசுவரன் ஒருவனே ஒழியப் பல பேர்கள் இருப்பது அஸாத்யம். அந்த ஒருவனுக்கு உட்பட்டே மற்றவர்கள் ஆட்சி நடத்துவது கிரமமாகும். இல்லையேல் உலகங்களுக்குக் கேடு விளையும். ஆனால் உன்னைத் தவிர மற்ற விஷ்ணு முதலிய தேவதைகளின் பெருமைகளை விரிவாய் வர்ணிக்கிறார்களே என்றால் அவ்வித வர்ணனைகள் அர்த்தவாதங்கள் ஆகின்றன. அவை தாற்காலிகமான ஸ்துதிகள். முடிவான தீர்மானத்தைக் குறிக்கின்றனவாகமாட்டா. ஸர்வேச்வரனான உன்னைத் தவிர மற்ற தேவர்கள் ஒரு வரம்புடன் கூடிய மகிமையைப் பெற்றவர்களே. அவர்கள் தவறுகளைச் செய்பவர்களாயும், அந்தப் பாப பயன்களை அடைபவர்களாயு மிருக்கிறார்கள். ஆதலால் அவர்கள் பாமரர்கள். நீயோ ஞான கலைக்கு அடையாளமான சந்திரகலையை தரித்தவன். அளவற்ற தடையற்ற மகிமை வாய்ந்தவன்.

(வி - ரை) ज्ञानचन्द्रकलाचूडं दशादिग्बाहुमण्डलम् - என்பது ஆகமம். அர்த்தவாதங்கள், நிந்தை, ஸ்துதி, ப்ரக்ருதி, புராகல்பம் என்று பலவகைப்படும். शिवस्य परतत्त्वस्य स्वभावः सकलं शुक। तदधीनं तदन्येषां इति तत्त्वविदां स्थितिः ॥ என்பதனால் மற்ற தேவர்களின் மஹிமை

அளவுக்கடங்கியது என்பது புலனாகும். விருத்திர ஹத்தி, கௌதம பத்னி தர்ஷணம் முதலியவற்றால் இந்திரன் பாபத்தையும், அதன் பயனையும் அடைந்தான் என்பது பிரசித்தம். ப்ரஹ்மா, விஷ்ணு முதலிய தேவர்களும் அவ்விதமே.

## —※ ब्रह्मादिभिः निष्कृष्टं शिवपारम्यम् ※—

बलमबलममीषां बल्बजानां विचिन्त्यं
कथमपि शिव कालक्षेपमात्रप्रधानैः ।
निखिलमपि रहस्यं नाथ निष्कृष्य साक्षात्
सरसिजभवमुख्यैः साधितं नः प्रमाणम् ॥ ४६ ॥

பலமபலமமீஷாம் பல்பஜானாம் விசிந்த்யம்
கதமபி சிவ காலக்ஷேப மாத்ர ப்ரதானை: |
நிகிலமபி ரஹஸ்யம் நாத நிஷ்க்ருஷ்ய ஸாக்ஷாத்
ஸரஸிஜபவமுக்யைஸ் ஸாதிதம் ந: ப்ரமாணம் ‖ 46

(ப-ரை) ப்ரஹ்மா முதலியவர்களால் சிவ பரத்துவம் தீர்மானிக்கப்பெற்றுள்ளது.

शिव – சிவபெருமானே बल्बजानां अमीषां - துர்பலர்களான இந்த தேவர்களின் बलं - பலமும் अबलं - பலமற்ற தன்மையும் कथमपि-வெகு சிரமப்பட்டு कालक्षेपमात्रप्रधानैः பொழுது போக்குவதிலேயே முக்கிய நோக்கமுடையவர்களால் विचिन्त्यं-ஆராய்ச்சி செய்யப்படவேண்டியது. नाथ–ஸ்வாமி निखिलमपि रहस्यं - வேதபுராணங்களின் ஸர்வரஹஸ்யத்தையும் निष्कृष्य – கடைந்தெடுத்து (ஒருங்கே திரட்டி) साक्षात् सरसिजभवमुख्यैः - நேராக ப்ரஹ்மா முதலியவர்களாலேயே साधितं - எது ஸாதிக்கப்பட்டிருக்கிறதோ அதுவே नः प्रमाणं - எமக்குச் சான்று.

(க - ரை) தேவர்களின் பரஸ்பர பலாபலங்களை ஆராய்ச்சி செய்து கொண்டு பொழுது போக்கிக் கொண்டிருக்கிறார்கள் பலர். அப்படி வீண் பொழுது போக்க எனக்கு அவசியமில்லை. கர்ம, உபாஸனா, ஜ்ஞான காண்டங்களின் பரமஸித்தாந்தத்தை ப்ரஹ்மா முதலியவர்கள் கடைந்து எடுத்துத் தெளிவாய் உரைத்து விட்டபடியால் நான் அவர்களின் வாக்கியத்தைக் கடைப்பிடித்துக்கொண்டு உன்னைச் சரண மடைவதே கதி என்பதை அறிந்திருக்கிறேன்.

(வி - ரை) न वा ओजीयो रुद्र त्वदस्ति - என்று வேதம் "எல்லோரையும் விட ஈசன் பலவான்" என்பதை உணர்த்துகிறது. मायाबलेनैव हरिं शिवेन समानमाहुः पुरुषाधमा हि ॥ என்பது ப்ரஹ்மகீதை. மேலும் परमशिवसमुद्रेऽहं हरिः सर्वदेवा मनुजपशुमृगाद्याः शीकरा एव सत्यं - என்று கூறியுள்ளது. विमलमतिभिरेवं वेदवेदान्तनिष्ठैः हृदयकुहरनिष्ठं वेदितुं शक्यते हि என்றும் ப்ரஹ்மகீதை.

—※ शिवपदाब्जमन्तरा नान्यत्र मे स्पृहा ※—

न किंचिन्मेनेऽतः समभिलषणीयं त्रिभुवने
सुखं वा दुःखं वा मम भवतु यद्भावि भगवन् ।
समुन्मीलत्पाथोरुहकुहरसौभाग्यमुषि ते
पदद्वन्द्वे चेतः परिचयमुपेयान्मम सदा ॥ ४७ ॥

ந கிஞ்சின்மேனே தஸ்
ஸமபிலஷணீயம் த்ரிபுவனே
ஸுகம் வா துக்கம் வா மம
பவது யத்பாவி பகவன் ।
ஸமுன்மீலத்பாதோருஹ
குஹரஸௌபாக்யமுஷி தே
பதத்வந்த்வே சேதஃ
பரிசயமுபேயான் மம ஸதா ॥ 47

(ப — ரை) சிவனது திருவடியன்றி வேறிடம் எனது விருப்பமில்லை என்கிருர்.

**त्रिभुवने** - மூன்று உலகங்களிலும் **अतः** - இதைக் காட்டிலும் **समभिलषणीयं** - விரும்பத்தகுந்ததாக **न किंचित् मेने** - நான் எதையும் மதிக்க வில்லை. **भगवन्** - ஈச்வர! **सुखं वा दुःखं वा** - சுகமோ துக்கமோ **मम** - எனக்கு **यत् भावि** - பிராரப்தவசமாய் எது வரக்கூடியதோ **भवतु** - அது வரட்டும். **समुन्मीलत् पाथोरुहकुहरसौभाग्यमुषि** - மலர்ந்த தாமரைப்பூவின் உட்புறத்தின் அழகைத் திருடும் **ते पदद्वन्द्वे** - உன்னிரு பாதங்களில் **मम चेतः** - என் மனம் **सदा** - எப்பொழுதும் **परिचयं** - நட்பை **उपेयात्** - அடையட்டும்.

(க — ரை) எனக்கு இம் மூன்று லோகங்களிலும் வேண்டக் கூடியது மற்றொன்று மில்லை. கர்மவசமாய் சுகமோ துக்கமோ எது வரவேண்டிய பிராப்தியோ அது வரட்டும். அதைப் பற்றி நான் கவலை கொள்ள வில்லை. நான் வேண்டுவது ஒன்றேதான். எப்பொழுதும் என்மனம் மலர்ந்த தாமரையின் உட்புறம் போல் அழகு மிகுந்த உன் இருசரணங்களில் ஈடு படட்டும்.

(வி - ரை) **ऐश्वर्यमग्र्यमनुपाधिमती च लक्ष्मीः शौर्यं च वीर्ययशसी च विरागता च। एते गुणाः षडपि ते भगसंज्ञयोक्ताः, सन्तीत्यनेन भगवानिति ते निराहुः॥** - என்பது சுதர்சனுசார்யார் வாக்கு. மற்ற தேவர்களை பகவான் என்ற சப்தம், அடைமொழியுடன் கூடியே சுக்ரபகவான், சூரியபகவான் என்று உணர்த்தும். ரிஷிகளுக்கும் ஏனைய தேவர்களுக்கும் பொருந்துமாறு **उत्पत्तिं निधनं चैव भूतानामा गतिं गतिम्। वेत्ति विद्यामविद्यां च स वाच्यो भगवानिति॥** லக்ஷணம் புராணங்களில் கூறப்பட்டுள்ளது

ऐश्वर्यस्य समग्रस्य वीर्यस्य यशसः श्रियः। ज्ञानवैराग्ययोश्चापि षण्णां भग इतीरणा॥—என்ற லக்ஷணம் சிவபெருமானுக்கே பொருந்தும்.

## —* हीनस्तुत्युच्छिष्टभावक्षमापणम् *—

उदरभरणमात्रं साध्यमुद्दिश्य नीचे-
ष्वसकृदुपनिबद्धामाहितोच्छिष्टभावाम्।
अहमिह नुतिभङ्गीमर्पयित्वोपहारं
तव चरणसरोजे तात जातोऽपराधी॥ ४८॥

உதரபரணமாத்ரம் ஸாத்ய
முத்திச்ய நீசேஷு
அஸக்ருதுபநிபத்தாம்
ஆஹிதோச்சிஷ்டபாவாம்।
அஹமிஹ நுதிபங்கீம்
அர்ப்பயித்வோபஹாரம்
தவ சரண ஸரோஜே
தாத ஜாதோபராதீ ॥ 48

(ப-ரை) நீசர்களைத் துதித்து தாழ்மையடைந்த நாவால் உன்னைத் துதித்த குற்றத்தை மன்னிக்க வேண்டுமென பிரார்த்திக்கிறார். तात - அப்பா! उदरभरणमात्रं साध्यं - வயிற்றை நிரப்பும் பலனை மட்டும் उद्दिश्य - உத்தேசம் செய்து असकृत् - அடிக்கடி नीचेषु - அல்பர்கள் விஷயத்தில் उपनिबद्धाम् - சுலோக ரூபமாய் அமைக்கப்பட்டு அதனால் आहितोच्छिष्टभावां - உச்சிஷ்டம் என்ற தன்மையை அடைவிக்கப்பட்ட नुतिभङ्गीं - ஸ்தோத்திரத்தை तव - உன்னுடைய चरणसरोजे - திருவடித் தாமரையில் उपहारं - காணிக்கையாக अर्पयित्वा -

-அர்ப்பணம் செய்துவிட்டு अहं-நான் अपराधी जातः-அபராதம் செய்தவனுனேன்.

(க-ரை) ஸ்வாமி! நான் இங்கு உன்னைத் துதிக்கும் முன் எவ்வளவோ அதமர்களை இந்த வாக்கினுல் துதித்திருக்கிறேன். வயிறு வளர்ப்பதற்காக அல்பர்களைத் துதித்த வாக்கினுல் உன்னைத் துதிப்பது பெரிய அபராதமாகும். நிந்திக்கத்தக்க காரியத்தில் ஈடுபட்டிருந்த என் வாக்கு அசுத்தமாகிவிட்டது. அதை இப்போது உன் விஷயத்தில் பிரயோகிப்பதனுல் நான் செய்யும் அபராதத்தை நீ க்ஷமித்துக் கொள்வாயா?

(வி-ரை) வர்ணம், ஆச்ரமம் வயது, கர்ம, நிலை முதலியவற்ருல் குறைந்தவர்களாயினும், பொருளின் நிமித்தம் துதித்ததால் வாக்கு அசுத்தமாயிற்று என்ருர்.

## —※ सर्वापराधक्षमापणम् ※—

सर्वं सदाशिव सहस्व ममापराधं
मग्नं समुद्धर महत्यमुमापदब्धौ ।
सर्वात्मना तव पदाम्बुजमेव दीनः
स्वामिन्ननन्यशरणः शरणं गतोऽस्मि ॥ ४९ ॥

ஸர்வம் ஸதாசிவ ஸஹஸ்வ மமாபராதம்
மக்னம் ஸமுத்தர மஹத்யமு மாபதப்தெள ।
ஸர்வாத்மனு தவ பதாம்புஜமேவ தீன:
ஸ்வாமின் அனன்யசரணச் சரணம் கதோஸ்மி ॥ 49

(ப-ரை) எல்லாக் குற்றங்களையும் பொறுக்க வேண்டுகிருர். सदाशिव-ஏ சதாசிவமே सर्वं मम अपराधं-என்னுடைய எல்லா அபராதங்களையும் सहस्व-பொறுத்துக்கொள். आपदब्धौ-ஆபத்துக்கடலில் मग्नं-

மூழ்கின अमुं - இந்த என்னை समुद्र - கை தூக்கிவிடு. स्वामिन् - ஸ்வாமியே दीनः (अहं) - எளிய நான் अनन्यशरणः - வேறு அடைக்கல மற்றவனாய் सर्वात्मना - என் முழுத் தீர்மானத்துடன் तव - உன்னுடைய पदाम्बुजमेव - திரு வடித் தாமரையையே शरणं गतोऽस्मि - சரணமடைந் திருக்கிறேன்.

(க - ரை) என் அபராதங்களை யெல்லாம் பொறுத் துக்கொண்டு என்னை இந்த ஆபத்துக்களினின்றும் நீ கைதூக்கி விடுவாயாக. ஹே ஸதாசிவ! எளியவனா கிய நான் எல்லாப்பற்றுகளையும் விட்டு வேறு சிந்தனை யில்லாமல் என்னை நீயே காப்பாய் என்று நம்பி உன் னையே சரணமடைந்து விட்டேன்.

(வி - ரை) ஈண்டு ஆபத்து என்று ஸம்ஸார துக் கத்தைக் குறிப்பிடுகிறார். உலக ரீதியில் அவர்கள் பெரியவர் எனினும், தன்னுடைய வித்யேச்வர பதவி யைத் திரும்பவும் பெறுவதற்கு ஈசனது கிருபை வேண்டப்படுவதால் அதைப் பெறவே எளியவன் என்று தன்னைக் குறிக்கிறார்.

चिदम्बरमिदं पुरं प्रथितमेव पुण्यस्थलं
सुताश्च विनयोज्ज्वलाः सुकृतयश्च काश्चित्कृताः ।
वयांसि मम सप्ततेरुपरि नैव भोगे स्पृहा
न किंचिदपि चिन्तये शिवपदं दिदृक्षे परम् ॥

என்று தீக்ஷிதர் அவர்களே கூறுகிறார்கள்.

## —* स्तुतिसमर्पणपूर्वकं प्रार्थना *—

आत्मार्पणस्तुतिरियं भगवन्निबद्धा
यद्यप्यनन्यमनसा न मया तथापि ।

वाचापि केवलमयं शरणं वृणीते
दीनो वराक इति रक्ष कृपानिधे माम् ॥ ५० ॥

ஆத்மார்ப்பண ஸ்துதிரியம் பகவன் நிபத்தா
ய்த்யப்யனன்ய மனஸா ந மயா ததாபி |
வாசாபி கேவலமயம் சரணம் வ்ருணீதே
தீனோ வராக இதி ரக்ஷ க்ருபாநிதே மாம் ‖ 50

(ப - ரை) ஸ்துதியை ஈசனிடம் ஸமர்ப்பணம் செய்து வேண்டுகிறார். भगवन्-ஓ ஈச்வர इयं-இந்த आत्मार्पणस्तुतिः-ஆத்மார்ப்பண ஸ்துதியானது मया-என்னால் अनन्यमनसा-வேறு விஷயங்களிலிருந்து கட்டுப்படுத்தப்பட்ட மனதுடன் यद्यपि न निबद्धा-இயற்றப்படவில்லை. तथापि-அப்படியிருப்பினும் कृपानिधे-தயாநிதியே अयं दीनः वराकः-இவன் எளியவன் அற்பன் वाचा केवलं-வெறும் வார்த்தையினால் மட்டுமாவது शरणं वृणीते-சரணத்தை வேண்டுகிறான் इति-என்ற காரணத்தைக்கொண்டு मां रक्ष-என்னை ரக்ஷிக்க வேண்டும்.

(க - ரை) நான் ஏகாக்ரசித்தனாக இருந்து இந்த ஆத்மார்ப்பண ஸ்துதியை இயற்றவில்லை எனினும் தயாநிதியே! ஸ்துதி ரூபமான வார்த்தைகளை (மனமுருகாமல்) மட்டுமாவது சொல்லுகிறானே என்று கருணை புரிந்து என்னை ரக்ஷிப்பாயாக.

(வி - ரை) நீ தயாநிதி; ஆதலின், நான் எவ்விதம் பிரார்த்தனை செய்தாலும் பயன் அளிப்பாய் என்பது தோன்ற கிருபாநிதே என்று ஸம்போதனம் செய்தார்.

முற்றிற்று.

# ஸ்ரீ காமகோடி கோசஸ்தானத்தின்

## சில முக்கிய வெளியீடுகள்

ஒவ்வொரு புத்தகமும் ஸ்ரீ ஆசார்யாளுடைய
அநுக்ரஹ பூர்வகமான ஸ்ரீமுகத்துடனும் கூடியது.

ரூ. பை.

1. ஸ்ரீ பஜகோவிந்தம்—ஸம்ஸ்க்ருத மூலமும் தமிழ் அனுவாதமும் .... .... .... 0—60
2. ஸ்ரீ முகுந்தமாலா—ஸம்ஸ்க்ருத மூலமும் தமிழ் உரையும் கூடியது .... .... .... 0—60
3. ஸ்ரீ ப்ரச்னோத்தர ரத்னமாலிகா—ஸ்ரீ சங்கரபகவத்பாதர் இயற்றியது (தமிழ் லிபியில்) .... .... .... 0—60
4. ஸ்ரீ மூகபஞ்சசதீ—ஸம்ஸ்க்ருத மூலமும் (தமிழுரையுடனும்) .... .... .... 2—50
5. ஸ்ரீ ஆனந்த ஸாகரஸ்தவம்—ஸம்ஸ்க்ருத மூலமும் தமிழ் இங்கிலீஷ் அனுவாதமும் .... .... 0—87
6. ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம்—தேவநாகரி, தமிழ் லிபிகளில் மூலமும், தமிழ் அனுவாதமும் .... 2—50
7. ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரமும், நாமாவளியும்—ஸம்ஸ்க்ருதத்தில் .... .... 0—40
8. —ஷை—தமிழில் ச்லோகமும், நாமாவளியும்.... .... 0—40
9. ஸ்ரீசிவபாதாதி கேசாந்த வர்ணநம் முதலிய ஐந்து சிவ ஸ்தோத்ரங்கள்—ஸம்ஸ்க்ருத ஸ்தோத்ரமும் தமிழ் அனுவாதமும் .... .... .... 0—87
10. விஷ்ணு பாதாதி கேசாந்த ஸ்தோத்ரம்—ஸம்ஸ்க்ருத மூலமும் தமிழ் ஆங்கில அனுவாதங்களும் .... 1—50
11. ஸ்ரீ சாந்தி விலாஸம்—ஸம்ஸ்க்ருத ஸ்தோத்ரமும் தமிழ் அனுவாதமும் .... .... .... 0—75
12. மாத்ருகா புஷ்பமாலா ஸ்துதி—ஸம்ஸ்க்ருத மூலமும் தமிழ் அனுவாதமும் .... .... .... 0—62
13. ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்ரம்—ஸ்ரீ ஸுரேச்வராசார்யாளின் மானஸோல்லாஸ வார்த்திகத்துடன் கூடியது 1—75
14. ஸ்ரீ துர்கா சந்த்ர கலாஸ்துதி—ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் அவர்கள் அருளியது .... .... ... 0—60
15. ஆத்மார்ப்பண ஸ்துதி—ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் அவர்கள் இயற்றியது .... .... .... 1—00


### ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம்

4. பிரான்ஸிஸ் ஜோஸப்புத் தெரு, சென்னை-1